# பங்கீடா? பணச்சலுகையா?

ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 2. இதழ் 20. | புதன்கிழமை 16—2—44 | விலை 2 அணா

## சர்க்காரின் துர்வினியோகத் திட்டம் சந்தி சிரிக்கிறது

சென்னை மாகாணத்திலுள்ள அட்வைஸரி சர்க்கார் அதிகாரிகளின் திறமையின்மை இன்று சந்தி சிரிக்கிறது. சென்னை நகரத்தில் ஏற்பட்டுள்ள விறகுப் பஞ்சத்தைப் போக்குவதற்காக, அவர்கள் தயாரித்துள்ள விறகுப் பங்கீட்டு திட்டம், நிர்வாகத்திறமையின்மையின் வரம்பையும் கடந்துவிட்டது. இந்த திட்டத்தை ஒரு பங்கீட்டு திட்டம், என்று புத்தி ஸ்வாதீனத்திலுள்ள எவனும் கூறத் துணியமாட்டான்.

ஜனங்களின் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான ஜீவாதாரப் பொருள்களுக்கு, தட்டு ஏற்படும்போது அதைப்பயன்படுத்திக்கொண்டு, சில வியாபாரிகள் கள்ளமார்க்கட்டுகளை நடத்த முற்படுகின்றனர். இதன் விளைவாக, கள்ளமார்க்கெட்டு விலை கொடுத்து வாங்கச் சக்தியுள்ள சில பணக்காரர்களுக்கு மாத்திரம்தான் இப்பொருள்கள் கிடைக்கும். சாதாரணமக்கள், இப்பொருளகளுக்காக அலைந்து திரிந்து, வாழ்க்கையை நடத்துவதே அசாத்தியமாய்விடுகிறது. இந்த நிலைமை ஏற்படாமல் காப்பாற்றுவதற்கே, பங்கீடுமுறை கையாளப் படுகிறது.

மக்களின் ஜீவாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்வதே, பங்கீட்டு முறையின் லட்சியம். மக்களில் மிகப் பெரும்பான்மையோர், ஒரு வேளைச் சோற்றுக்கே பொருள் கிடைக்காமல் திண்டாடும்போது, சிலர் மாத்திரம் தங்கள் பழக்கப்பட்ட உல்லாசவாழ்க்கையை நடத்துவதை அனுமதிக்க முடியாது, என்பதுதான் பங்கீட்டு முறையின் அடிப்படை.

### தியாகம் அனைவருக்கும் பொது

ஜீவாதார சாமான்களுக்குக் குறைவு ஏற்பட்டால் மக்கள்தியாகம் செய்யத்தான்வேண்டிவரும். ஆனால் தியாகம் என்பது எல்லா மக்களும் செய்யவேண்டிய விஷயம். பெரும்பான்மையான ஏழை மக்களையும், நடுத்தர வர்க்கத்து மக்களையும், தியாகம் செய்யச்சொல்லி, பணக்காரக் கும்பல்கள் எப்பொழுதும் போலவே வாழ்வதை அனுமதிப்பதை, எந்த நாகரீக மனிதனும், எந்த நியாயபுத்தியுள்ளவனும், ஏற்றுக் கொள்ளமாட்டான்.

### விசித்திரவாதம்!

சர்க்கார் வெளியிட்டுள்ள திட்டம், இந்த அடிப்படைக்கு முற்றிலும் முரண்பட்டதாயிருக்கிறது. 12 வயதுக்கு மேற்பட்டவர்கள் மூவரையும், 12 வயதுக்குட்பட்ட ஒரு குழந்தையையும்கொண்ட ஒரு குடும்பத்திற்கு, 30 ருபாய்க்குக் குறைவான மாத வருமானமிருந்தால், மாதம் 1 குண்டு விறகு அளிக்கப்படுமாம். அதே அளவுள்ள குடும்பத்திற்கு, மாதம் 1,000 ருபாய்க்கு மேற்பட்ட வருமான மிருந்தால், 20 குண்டு விறகு அளிக்கப்படுமாம்! இதற்கிடையில், வருமானத்தை அளவாகக்கொண்ட 5 வேறு ரகங்கள் இருக்கின்றன. இவ்வாறு, வருமானத்தை அடிப்படையாகக்கொண்டு, ஜனங்கள் ஏழு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். அதற்கப்பால், ஒவ்வொரு குடும்பத்தின் அளவைக்கொண்டு, 3 உட்பிரிவினைகள் வேறே. உதாரணமாக, மாதம் 31 ருபாய் வருமானமுள்ள ஒரு குடும்பத்தில், 4 நபர்கள் இருந்தால், அதற்கு மாதம் 2½ குண்டு விறகாம். அதே வருமானமுள்ள மற்றொரு குடும்பத்தில், 8 பேர்கள் இருந்தாலும், அதே 2½ குண்டு விறகுதான் செலவழியுமாம். 4 பேரைக் கொண்ட குடும்பத்திற்கு மாதம், 37½ படி அரிசியும் 8 பேரைக்கொண்ட குடும்பத்திற்கு, மாதம் 75 படி அரிசியும் வினியோகிக்கப்படுகிறது.

37½ படி அரிசியையும், அதற்கான பதார்த்தங்களையும் சமைக்க எவ்வளவு விறகு தேவையோ, அதேஅளவுதான் 75 படி அரிசியையும், பதார்த்தங்களையும் சமைக்கத் தேவையாயிருக்கும் என்று சென்னை சர்க்கார் கூறுகிறது!

### 100-க்கு 80 பேருக்கு ஆபத்து

சர்க்காருடைய திட்டம் அமுலுக்கு வந்தால் மாதம் 100 ருபாய்க்குக் குறைவான வருமானமுள்ள குடும்பங்களெல்லாம், அரிசியை தண்ணீரில் ஊறவைத்துக் காய்கறிகளை பச்சையாகச் சாப்பிடவேண்டி வரும். உணவு நெருக்கடி ஏற்பட்டிருக்கும்போது, வேகவைக்காமல், பச்சையாகச் சாப்பிட்டால், 'வைடமின்' அதிகமாகக்கிடைக்கும் என்று சர்க்கார் அதிகாரிகள் நினைத்துவிட்டனர்போலும்!

இந்தத்திட்டத்தைத் தயாரிக்க, எவ்வளவு மாதம் புள்ளிவிவரங்களைச் சேகரித்தார்கள்தெரியுமா? சென்னை கலெக்டர் ஒருவரே நேரடியாக வீடு வீடாக, ஒரு மாதம் அலைந்து, புள்ளி விவரங்களைச் சேகரித்தாராம்! இவ்வளவு கஷ்டப்பட்டு, இந்தக் கணக்கைக் கண்டுபிடித்திருக்கின்றனர். ஜெயிலில் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் அலவன்ஸ் இருக்கிறது. சென்னை சர்க்கார் 5 வருஷங்களாக தொழிலாளி மக்களின் வாழ்க்கைச் சிலவு புள்ளி விவரங்களை மாதாமாதம் தயாரித்துப் பிரசுரிக்கின்றனர். அந்தக் கணக்குப்படி பார்த்தாலும் கூட 4 பேர்களைக் கொண்ட ஒரு குடும்பம், மாதம் 4 குண்டு விறகை உபயோகித்துவருகிறதென்பது தெரியவரும். இதையெல்லாம் விட்டுவிட்டு ஊரெல்லாம் அலைந்து கணக்குக் கண்டுபிடித்தவர்களின் மூளையை திராவகத்தில் பத்திரப் படுத்தி, நம் சந்ததியார் என்றென்றைக்கும் மறக்காவண்ணம் பொருட்காட்சி சாலையில் வைக்கத்தான் வேண்டும்.

100 ருபாய்க்குக் குறைவாக வருமானமுள்ள குடும்பங்களின் தொகை மிகப் பெரும்பான்மையாகும். நகரில் உள்ள 10 லக்ஷம் ஜனங்களில் 8 லட்சத்திற்கு மேற்பட்ட ஜனங்கள் இந்தக் குடும்பங்களைச் சார்ந்தவர்களே. இவர்களுக்கு அத்தியாவசியமான, உயிர்வாழ்வதற்கு இன்றியமையாத விறகை அளிக்க மறுத்து, அதே சமயத்தில், 500, 1,000 சம்பளம் வாங்கும் பெரிய மனிதர்களின் ஆடம்பர வாழ்க்கையைப் பாதுகாப்பதற்கான திட்டமே சர்க்காரின் திட்டம். மக்களின் வாழ்க்கைக்கு அவசியமான பொருள்களைச் சரிவர வினியோகிக்க வேண்டியது நாகரீக சர்க்காருடைய கடமையாகும். இந்தக் கடமையை சென்னையிலுள்ள அதிகாரவர்க்கம் உணராமல் பொறுப்பைத் தட்டிக்கழிக்கிறது இந்தத் திட்டத்தைப் பிரசுரித்ததின் மூலம், சென்னை அதிகாரவர்க்கம் தன்னுடைய வர்க்க மனோபாவத்தையே வெளிப்படுத்தியிருக்கிறது.

### பொருளாதார சீர்குலைவு

இந்தத் திட்டம் அமுலுக்கு வருமானால் சென்னை நகரம் சுடுகாடாகத்தான் மாறும். கல்கத்தா நகரத்தைக் காட்டிலும் பயங்கரமான நிலைமை ஏற்படும். நகரிலுள்ள மக்கள், தங்

**பி. ராமமூர்த்தி**

கள் தொழில்களை நடத்தமுடியாது ரயில்வேத் தொழிலாளர்கள், மில் தொழிலாளர்கள், டிராம்வேத் தொழிலாளர்கள் முதலிய எல்லாத் தொழிலாளிமக்களும், குமாஸ்தாக்களும், சர்க்கார் குமாஸ்தாக்களுங் கூட தங்கள் வேலையைச் செய்வதென்பது முடியாது. தொழிற்சாலைகளிலும், போக்குவரத்துச் சாதனங்களிலும் மிகப் பெரிய ஸ்தம்பிப்பு ஏற்படும்; யுத்தத்தின் போக்கை எவ்வளவு தூரம் அது பாதிக்கும் என்பதை நாம் உணரவேண்டும். நாடு பூராவிலும் எவ்வளவு பிரும்மாண்டமான பொருளாதார வாழ்க்கைச் சீர்குலைவில் அது கொண்டு போய்விடும் என்பதை நாம் உணர்தல் வேண்டும்.

விறகுப் பஞ்சம் என்பது சென்னை நகரத்தில் மாத்திரம் ஏற்பட்டுவிடவில்லை மாகாணம் பூராவிலும் இன்று பரவிவருகிறது. சென்னையிலேயே இது நேற்று இன்று திடீரெனத் தோன்றிவிடவில்லை. சென்ற வருஷம் ஆகஸ்டு மாதத்திலேயே தோன்றி, நாளுக்கு நாள் தீவிரமாக வளர்ந்துவந்திருக்கிறது. அதிகார வர்க்கம் எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கையும், அதை வளர்க்கக்கூடியதாயிருக்கிறதேயன்றி கட்டுப்படுத்துவதாயில்லை.

### மக்களின் பொறுப்பு

ஆனால், அதிகாரவர்க்கத்தின்மேல் பாரத்தைப்போட்டுவிட்டு, நாம் சும்மாயிருந்துவிட முடியாது. எந்த ஊரிலும், கள்ள மார்க்கெட்டுகள்தான் மலிந்துகிடக்கின்றன. இந்தக்கள்ள மார்க்கெட்டுகளை ஒழிப்பதற்கு, மக்களின் ஒற்றுமையின் மூலமாகத்தான் முடியும்; ஜனங்கள் விழிப்படைந்து, ஸ்தாபன ரீதியாகக் கமிட்டிகளை ஸ்தாபித்து, கண்காணிப்பு வேலையை மேற்கொள்ளவேண்டும். நம்முடைய பலத்தினாலும், கண்காணிப்பினாலும், கள்ளசேமிப்புகளை நாம் கண்டுபிடிப்போமேயானால், எந்த அதிகாரியும், நம்மைப் புறக்கணிக்கமுடியாது.

விறகுப்பஞ்சம், பலபிரச்சினைகளோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. நிலக்கரிக் குறைவினால், பல மில்களும், தொழிற்சாலைகளும் — ஏன் ரயில்வேக்களும்கூட—விறகை உபயோகிக்கவேண்டியிருக்கிறது. பஸ் வண்டிகளுக்கெல்லாம், பெட்ரோல் குறைவினால், கரியை உபயோகிக்க வேண்டியிருக்கிறது. மேலும், போக்குவரத்து சாதனங்களும் குறைவாகவே இருக்கிறது. இக்காரணங்களினால், விறகு குறைவுபடலாம். ஆனால், உள்ள நிலைமையை ஒளிவு மறைவு இல்லாமல், ஜனங்களிடத்தில் சொல்லியாகவேண்டும். இருக்கக்கூடிய கஷ்டத்தைச் சொன்னால், ஏன் ஜனங்கள் தியாகம் செய்வதற்கு முன்வரமாட்டார்கள்!

ஆனால், அதிகாரவர்க்கம் ஜனங்களின்மீது நம்பிக்கை கொள்வதில்லை; பைத்தியக்காரத்திட்டங்களை வகுக்கிறது.

### ஒன்றுபட்ட கிளர்ச்சி

மாகாணம் பூராவும், ஜனங்கள் ஒவ்வொரு ஊரிலும் ஒன்றுபட்டு, கிளர்ச்சி நடத்தவேண்டுவது உடனடித் தேவையாகும். பலத்த கிளர்ச்சியின்மூலமாக, இந்தத் திட்டத்தைக் கைவிடுமாறு நிர்ப்பந்தப் படுத்துவோம். விறகுக் குறைவு ஏற்பட்டுள்ளது என்றால், நிச்சயமாக நாம் தியாகம் செய்வதற்குத் தயார் "சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்" என்பது தமிழ்நாட்டுப் பழமொழியல்லவா! ஆனால், ஜனங்களுக்கு அவசியமான தேவையைப் பூர்த்திசெய்யாமல், குறைந்தது 4 குண்டுகூடக் கிடைக்காமலிருக்கும் போது, பணக்காரர்களுக்கு விறகு கொடுக்கும் திட்டத்தை அனுமதிக்கலாகாது.

அதிகார வர்க்கம் இந்தப் பிரச்சினையில் தனித்து நிற்கிறது.

(அவர்கள் வகுத்த திட்டத்தை, இன்று தேசத்தில் ஆதரிப்பார் ஒருவர்கூட இல்லை என்று கூறலாம். சென்னை கார்ப்பொரேஷனில் நடந்த விவாதத்தில் ஐரோப்பிய அங்கத்தினர்கூட அதிகாரவர்க்கத்தை இவ்விஷயத்தில் காரசாரமாகத் தாக்கியிருக்கிறார். ஒருபத்திரிக்கையாவது ஆதரித்து எழுதவில்லை).

இந்த நிலையில் ஜனங்களுடைய ஒற்றுமையின் மூலம், சரியான திட்டத்தை, தேவைக்குத் தகுந்தவாறு கொடுக்கும் 'ரேஷனிங்' முறையை மாகாணம் பூராவும் அமுலுக்குக்கொண்டு வரும் கிளர்ச்சி நிச்சயமாக வெற்றிபெறும். ஏழைமக்களின் வயிற்றிலடித்து, பணத்திற்குச் சலுகை காட்டும் சுரண்டல் திட்டத்தை ஜனங்களின் சக்தியைக் கொண்டு திண்ணமாக முறியடிக்க முடியும்.

---

★ வங்கத்திற்கு ★

## உதயசங்கரின் நாடக வசூல்

(சென்ற வாரத்தில், டில்லியில் உதயசங்கருடன் தோழர் பினுப் ராயின் சந்திப்பைப்பற்றி எழுதியிருந்தோம்)

இப்பொழுது உதய சங்கர் பம்பாய் வந்திருக்கிறார். பம்பாயில் பல நடனக் காட்சிகளை நடத்தினார். கடைசியாக நடத்திய இரு காட்சிகளின் வசூல் பூராவும் வங்கத்தின் நிவாரணத்திற்காக அளித்துள்ளார். பம்பாயிலுள்ள இந்திய ஜன நாடகக் கலா மண்டலத்தின் (Indian Peoples' Theatres' Association) சார்பில் நடத்தப்பட்டன. எல்லா ஜனங்களும் அக்காட்சிகளைப் பார்க்கும் முறையில் கட்டணவிகிதங்கள் நிர்ணயித்திருந்தனர். 4 அணா முதல் ரூ. 1-4-0 வரைதான்.

பம்பாயில் பரேல் செயின்ட் சேவியர் கல்லூரி மைதானத்தில் இக்காட்சிகள் நடைபெற்றன. ஆயிரக் கணக்கில் தொழிலாளிகள் குழுமியிருந்தனர் "இக்கலைக் காட்சியின் வசூல் பூராவும் வங்க நிவாரணத்திற்கு அனுப்பப்படும்" என்று உதயசங்கர் மேடைமீதேறி அறிவித்ததும் கூட்டத்தினர் காது செவிடுபடும்படி கரகோஷமிட்டு வரவேற்றனர்.

ஜனவரி 30ந்தேதியன்று நடைபெற்ற காட்சியின் ஆரம்பத்தில் பம்பாய் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ புலாபாய் தேசாய், உதய சங்கரின் இந்த முயற்சியைப் பாராட்டி, வங்கத்திற்கு நிவாரணமளிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்.

இரண்டு நாட்களிலும் மொத்தம் 9,000-க்கு அதிகமான ஜனத்திரள். மொத்த வசூல் ரூ. 3,700. இது பூராவும் வங்கப்பொதுஜன நிவாரணக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டுள்ளது.

---

மலேயாவில்

## ஜப்பானியரை எதிர்த்து கொரில்லாப் போர்

சீன மக்கள் ஜப்பானிய ஆக்ரமிப்புக்குள்ளான பிரதேசங்களிலெல்லாம் கொரில்லாச் சண்டையிட்டு எவ்வாறு பாஸிஸ்டுகளை எதிர்த்து வருகின்றனரோ, அதே மாதிரி மலேயாவிலும், ஜனங்கள் கொரில்லாப் படைகளாக அமைத்துக்கொண்டு ஜப்பானியரை எதிர்த்து வீரச் சாகஸங்கள் பல புரிந்து வருகின்றனர்.

### கொரில்லாக்களைப் பிடிக்க...

மலேயாவில் எங்கோ ஓரிடத்தில் கொரில்லாக்கள் ஒளிந்துகொண்டிருப்பதாக ஜப்பானியர்களுக்கு செய்தி கிடைத்தது. அந்த இடத்தைக் கண்டு பிடிக்க ஒரு ஜப்பானிய ஆபீஸர் புறப்பட்டான். கூடவே ஒரு மலேயா குவிஸ்லிங்கும் அந்த ஜப்பானியனுக்கு வழிகாட்ட.

அந்த கொரில்லாக்களை எதிர்த்துப் போராடி வெற்றிபெற இவர்களால் முடியவில்லை. ஆதலால் ஒரு சமரஸம் பேசி, அதன்படி அவர்களுக்கு ஏதாவது சலுகைகள் கொடுத்துவிட்டு, தங்களாட்சியை ஸ்திரப்படுத்திக்கொள்ளலாம்என்று நினைத்தார்கள் ஜப்பனியர்கள்.

காடு, மலை, பள்ளம், மேடு, ஆறுகள் எல்லாம் தாண்டிச் செல்ல வேண்டியிருந்தது. கடைசியாக ஒரு குன்றுக்கு வந்தனர். அங்கிருந்து பார்த்தபோது வெகு தூரத்தில் சிறு சிறு புள்ளிகளைபோல் ஏராளமான கூடாரங்கள் தென்பட்டன. பீரங்கிகள், அகழ் பீரங்கிகள், துப்பாக்கிகள் முதலியனவும் ஏராளமாகக் காணப்பட்டன.

குன்றிலிருந்து இறங்கி, அந்த கூடாரங்களை நோக்கி நகர்ந்து சென்றனர். அந்த கூடாரங்களையெல்லாம் காவல் காத்துக்கொண்டு, சுற்றியும் என்ன நடக்கிறது, யார் வருகின்றார்கள் என்பதை கவனிக்க ஒரு வீரன் இருப்பானல்லவா! அந்த ஜப்பானியன் வருவது அவன் கண்ணில்பட்டது.

### குண்டோட்டம்.......

தன்னை யாரோ பார்த்துக்கொண்டதை அறிந்த ஜப்பானியன் "என்னை சுட்டுவிடாதீர்கள்; உங்களைப் பார்க்க வரும் ஒரு நண்பன்தான் நான்" என்று கூக்குரலிட்டான். சில விநாடிகளுக்கு ஒரு பதிலும் இல்லை. பிறகு 'பட பட' வென்று குண்டுகள் சரமாரியாகப் பொழிய ஆரம்பித்தன; அந்த ஜப்பானியன் குண்டுகளினின்றும் தப்பிக்க், சட்டென்று தரையில் படுத்துக் கொண்டான்.

ஊர்ந்துகொண்டே சிறிது தூரம் போய் எழுந்து குண்டோட்டம் குதிரையோட்டமாய் ஓடிவிட்டான். அந்தக் குவிஸ்லிங்கும் கூடத்தான். பின் ஜப்பானிய ராணுவ ஸ்தலத்தில் போய் "அவர்கள் ஏராளமான ஆட்களையும், தளவாடங்களையும் வைத்துக் கொண்டிருக்கின்றனர்; சரணடைய மறுத்துவிட்டனர்" என்று கூறிவிட்டான்.

### மார்க்கஸ் செங் கூறுவது

இவ்விஷயங்களையெல்லாம் ரேவரண்ட் மார்க்கஸ் செங் என்பவர் வெளியிடுகிறார். இவர் சமீபத்தில் சுங்கிங் (சீனாவின் தலைநகரம்) வந்து சேர்ந்த ஒரு சீன கிருஸ்தவப் பாதிரி. சிங்கப்பூரில் ஜப்பானியர்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு வந்திருக்கிறார். மலேயாவில் சிறிது காலம் மறைமுகமாக இருந்திருக்கின்றார்.

(8-ம் பக்கம் பார்க்க)

---

"சௌ"

## சீன கொரில்லாத் தலைவி

சீன கொரில்லாத் தலைவி சௌ டாங், சீனாவில் ஜப்பானிய ஆக்ரமிப்பு ஏற்பட்டபின் முதன் முதலில் கொரில்லாப் போர் இயக்கத்தை ஆரம்பித்தவர். ஆயிரக் கணக்கான சீனர்களை கொரில்லாக்களாகப் பயிற்றுவித்தது இவர்தான். "சௌ" என்றே சீனர்கள் இவரை அழைப்பர். இவர் தானாகவே 1,000 ஜப்பானியர்களைக் கொன்றிருக்கிறார். தன்னுடைய தலைமையின் கீழ் 50,000 சீனர்களை—ஆண், பெண், சிறுவர் அடங்கலாக கொரில்லா வீரர்களாக வைத்துக்கொண்டிருக்கிறார்.

இவரைப் பிடிப்பதற்கு ஜப்பானியர் என்னென்னவோ உபாயங்களைக் கையாண்டனர். பிடிக்கவே முடியவில்லை இப்பொழுது சீனாவிலிருந்தே இன்னும் யாரேனும் துரோகிகள் இவரைப்பிடித்துக்கொடுக்கமாட்டார்களா என்றெதிர்பார்க்கின்றனர். இவரைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ஒரு பெரிய வெகுமதி அளிப்பதாகப் பறைசாற்றியுள்ளனர்!

ஜனசக்தி

தந்தி விலாசம் "ஜனசக்தி" டெலிபோன் நெ. 3887

வருட சந்தா ரூ. 5. 6 மாதம் ரூ. 3. 3 மாதம் ரூ. 1-8-0.

# பெரியதோர் ஆபத்து!

யுத்தம் ஆரம்பமாகி நான்கு வருஷங்களுக்கு மேலாகிவிட்டன. கடந்த $1\frac{1}{2}$ வருஷங்களாகவே, தொழிற்சாலைகளுக்கும் ரயில்வேக்களுக்கும் வேண்டிய நிலக்கரிக்குப் பஞ்சம் ஏற்பட்டு வளர்ந்து வருகிறது. இந்தக்காலத்தில், எத்தனையோ பஞ்சாலைகளும், சணல் ஆலைகளும், பலநாட்களாக மூடப்பட்டன. நிலக்கரி உற்பத்தியும்கூட குறைந்திருக்கிறது.

ஆனல், இப்பொழுதுதான், நிலக்கரி உற்பத்தியும், வினியோகத்தையும், 'கண்ட்ரோல்' செய்வதற்காக யோசனைசெய்து, ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறதாம்! அதை சமீபத்தில், ஒரு ஆலோசனைக் கமிட்டி, கூடி பரிசிலனை செய்துபார்த்ததாம்.

சர்க்காருடைய திட்டத்தின் முதல் அம்சம் என்ன தெரியுமா? ஒவ்வொரு நிலக்கரிச் சுரங்கத்திலும், சென்ற மாதத்தில் எவ்வளவு நிலக்கரி உற்பத்தியாயிற்று, இந்த மாதத்தில் எவ்வளவு உற்பத்தியாகிறது, அடுத்த மாதத்தில் எவ்வளவு உற்பத்தியாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்று நிலக்கரிச் சுரங்க முதலாளிகளுக்கு எழுதி புள்ளி விவரங்களைத் தயாரிக்கப்போகிறர்களாம்! புள்ளி விவரங்களைத் தயாரிக்கும் யோசனைகூட இந்த அதிகாரவர்க்கத்திற்கு $4\frac{1}{2}$ வருஷங்களுக்குப் பிறகுதான் உதயமாகிறது என்றால், இதன் அசகாயசூரத்தன்மை வாய்ந்த திறமையைப்பற்றி எப்படித்தான் வர்ணிப்பதென்பதுதான் தெரியவில்லை.

*இன்றைக்கு நாட்டின் பொருளாதார வாழ்க்கைக்கு ஜீவாதாரமானது நிலக்கரி. நிலக்கரிப் பஞ்சத்தினல் பல மில்களும், தொழிற்சாலைகளும் கூடவிறகுக்கட்டைகளை உபயோகிக்கின்றன. உதாரணமாக, மதுரை நகரம் பூராவிலும்உள்ள மக்கள் உபயோகிக்கும் அளவு கட்டையை, அங்குள்ள ஹார்விமில் இன்று ஜீர்ணித்து வருகிறது. இதனல், மதுரைபோன்ற பல நகரங்களில் விறகுப்பஞ்சம் பரவிவருகிறது.*

*நிலக்கரி உற்பத்தியின் நிலைமையை நினைத்தால் உள்ளம் குமுறுகிறது. இந்த பயங்கரமான நிலைமையில், 1942ல், அதற்கு முந்திய வருஷத்தைக் காட்டிலும் குறைவாகவே நிலக்கரி உற்பத்தியாயிருக்கிறது. நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளிகளோ, சுரங்கங்களைவிட்டு வெளியேறுகின்றனர்.*

பூமியைக் குடைந்துகொண்டு, காற்றோட்டமில்லாத ஆபத்து நிறைந்த அந்தப் பாதாளங்களில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் மாதச் சம்பளம் ரூ. 14 தான். அதுவும், யுத்த அலவன்ஸ் முதலியவைகளெல்லாம் சேர்த்து! அக்கம்பக்கத்திலுள்ள மற்ற தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் கூலியில் பாதியளவுகூட இன்று தேசத்தின் உயிர்நாடியாயிருக்கும் சுரங்கத் தொழிலாளிக்குக் கிடையாது! விலைவாசிகள், பீகாரில், $2\frac{1}{2}$ மடங்கு உயர்ந்திருக்கின்றன. இந்த நிலைமையில், சுரங்கத்தொழிலாளி, சுரங்கத்தைவிட்டு, வெளியேறுவதில் என்ன ஆச்சரிய மிருக்கிறது?

இதற்கு இந்திய சர்க்கார் ஒரு புது வழியைக் கண்டுபிடித்திருக்கின்றனர். பெண்கள் சுரங்கங்களில் வேலை செய்யக்கூடாது என்று நீண்டகாலமாக இருந்து வந்த சட்டத்தை, சர்க்கார் எடுத்துவிட்டது. சர்வதேச ஒப்பந்தத்தை இன்று சர்க்கார் மீறியுள்ளது.

நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்க, முதலாளிகளுக்கு சற்றேனும் ஆர்வமில்லை என்பது தெளிவு. இதை சென்ற வாரம் டில்லி சட்டசபையில் நடந்த விவாதத்தின்போது, சுரங்க முதலாளிகளின் சார்பாகப் பேசிய ஸர். ஹென்ரி ரிச்சர்ட்ஸன் பச்சையாகக் கூறினர். நிலக்கரியை அதிகமாக உற்பத்தி செய்வதனல், அவர்களுடைய ஆஸ்தி வீணகப் போய்விடுகிறதாம்! அதனல் அதிகலாபம் கிடையாதாம்! ஏனெனில், சர்க்கார் அமிதலாப வரியின் மூலமாக கொள்ளைலாபத்தின் பெரிய பகுதியை எடுத்துக்கொண்டு போய்விடுகிறதாம்!

**தொழிலாளிகளின் கூலியை உயர்த்துவதையும் அவர் எதிர்த்தார். காரணம் கூலியை உயர்த்தினல், அவர்கள் உற்பத்தியைக் குறைத்துவிடுவார்களாம்!**

**இந்த நிலைமையில்தான், அதிகாரவர்க்கம், லாபப் பேராசை பிடித்த இந்த சுரங்க முதலாளிகளுக்கு லஞ்சம் கொடுக்க முன்வந்துள்ளது. குறிப்பிட்ட அளவுக்குமேல், நிலக்கரியை உற்பத்திசெய்யும் முதலாளிகளுக்கு, அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் அமிதலாப வரியில் ஒருபகுதியை 'போனஸாக', திருப்பிக்கொடுக்க திட்டம் போடப்பட்டிருக்கிறது.**

**ஜனங்களிடத்தில் நம்பிக்கை இல்லாத அதிகாரவர்க்கத்தின் மனப்பான்மை வேறு எப்படித்தான் இருக்கமுடியும்? முதலாளிகளுக்கு லஞ்சம் கொடுப்பதன்மூலமாக உற்பத்தியை அதிகரிக்கமுடியும் என்று அதுநினைப்பது இயற்கைதானே?**

**இன்றுள்ள எந்தப் பிரச்னையையும் தீர்த்துவைக்க இயலாது அதிகாரவர்க்கம் குழப்பிக்கொண்டிருக்கிறது. அடக்குமுறைப் பிரயோகத்தைத்தவிர, வேறு எந்தப் பிரச்னையிலும் அது திறமையற்றிருக்கிறது.**

*ஆனல், இந்தநிலைமையை அனுமதிப்பது தேசத்திற்கே மாபெரும் ஆபத்து. தொழிற்சாலைகளுக்கும், போக்குவரத்திற்கும் ஆபத்து ஏற்பட்டால், நாட்டின் நிலைமை என்ன ஆகும்? நாட்டின் பாதுகாப்பு என்ன ஆகும்? எனவே, நாட்டின் சமூகப்பொருளாதார வாழ்க்கையைப் பாதுகாக்கும்பொருட்டு, நம் நாடு வாழ்வதன் பொருட்டு, இன்று தேசம் பூராவும் பலத்த கிளர்ச்சி நடந்தாகவேண்டும். நிலக்கரி சுரங்கத் தொழிலாளிகளின் கோரிக்கை இன்று தேசமக்களின் கோரிக்கையாகும். அவர்கள் வாழ்ந்தால்தான் தேசம் வாழமுடியும்.*

*ஆகவே அவர்களுடைய வாழ்க்கை வசதிகளுக்கு உத்திரவாதமளிக்குமாறு சுரங்க முதலாளிகளை நிர்ப்பந்திப்போமாக! இந்தக் கோரிக்கையை மறுக்கும் முதலாளிகளை, ஜனங்களின் விரோதிகளாக பாவிக்கவேண்டும். நிலக்கரி என்பது இன்று அவனுடைய சொத்தல்ல. தேசத்தின் சொத்தாகும். அதை நிர்வகிக்கத் திறமையில்லாத முதலாளிகளிடமிருந்து, சுரங்கங்களைப் பிடுங்கி சர்க்காரே நடத்தவேண்டும். சமீபத்தில் நடந்த அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸின் மத்தியக் கவுன்ஸில், இதை வற்புறுத்தியிருக்கிறது.*

# ★ சென்னை சர்க்கார் இறங்குகிறது!

# ★ மத்ய சட்டசபையில் வெளியானதென்ன?

# ★ உண்மைத் தொழிலாளர் பிரதிநிதி யார்?

[குறிப்புகள்]

"அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்" என்பது சாதாரண ஜனங்களின் வழக்கத்திலுள்ள ஒரு பழமொழி. நம் சென்னை சர்க்கார்விஷயத்தில் இன்று இதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

சர்க்கார் முதலில் வெளியிட்ட விறகுப் பங்கீட்டுத் திட்டத்தை எதிர்த்து சென்னை நகரெங்கும், எல்லா ஸ்தாபனங்களும், பத்திரிகைகளும், பொதுஜனங்களும் பலத்த கிளர்ச்சி செய்ததின் பலனக சர்க்கார் இறங்கி வந்திருக்கின்றது. தங்களுடைய பழைய பிற்போக்கான திட்டத்தையே ஓரளவுக்கு மாற்றிக்கொண்டுள்ளது.

## அடிப்படையில் மாறுதலில்லை

பழைய திட்டத்தின்படி 30 ரூபாயிக்குக் கீழே சம்பளம் வாங்கும் 4 பேருள்ள குடும்பத்திற்கு, மாதத்திற்கு ஒரு குண்டு விறகு என்றிருந்தது. புதிய திட்டத்தின்படி அதை 2 குண்டாக உயர்த்தி யிருக்கிறர்கள். 1000 ரூபாய்க்கு மேல் அதிகமாக வருமானம் உள்ள குடும்பங்களுக்கு 25 குண்டிலிருந்து 15 குண்டாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

ஆயினும் இன்னும் சர்க்காரின் அடிப்படையான கொள்கையில் போதிய அளவுக்கு மாறுதல் ஏற்படவில்லை. சாதாரண மக்களின் வாழ்க்கைத் தேவைகளைக் காட்டிலும், பணக்கார வர்க்கத்தினுடைய சவுகரியங்களைப் பாதுகாப்பதே பிரதானம் என்பதையே சர்க்கார் வெளியிட்ட முதல் திட்டம் பிரதிபலித்தது. இந்தப் புதிய திட்டத்திலும் இந்தக் கொள்கை கைவிடப்படவில்லை.

எவ்வாறெனில்,

சென்னைநகரிலுள்ள மொத்தம் 2 லக்ஷம் குடும்பங்களில் மாதம் 30 ரூபாய்க்குக்கிழே வருமானம்பெறும் குடும்பங்கள் 1,30,000. இந்தக் குடும்பங்களுக்கு மாதம், அதிகமாகப் போனல் 3 குண்டுகளுக்கு மேல் கிடையாது. அதுவும் சர்க்கார் பிரித்துள்ளபடி இந்த 30 ரூபாயிக்குக் கீழ் வருமானமும் 126 யூனிட்டுக்கு அதிகமாக அரிசியும் பெறும் குடும்பங்களுக்குத்தான் இந்த 3 குண்டும். அதாவது இந்த 1,30,000 குடும்பங்களில் பெரும்பகுதிக்கு மாதம் 2 குண்டு விறகுதான். ஆதலால் இந்தக் குடும்பங்கள் ஒரு மாதத்தில் 10 அல்லது 12 நாள் வீட்டில் சமையல் செய்யாமல் பச்சையாகத் தின்னும் நிலைமைதான் ஏற்படும். அல்லது பட்டினிதான்!

## கிளர்ச்சியில் வெற்றி

அதேசமயத்தில் பணக்கார வர்க்கத்தாருக்கு 12 குண்டிலிருந்து 15 குண்டுவரை சப்ளை செய்யப்படுகிறது.

ஆதலால் சர்க்கார் ஏழைஜனங்களின் தலையில்தான் கைவைத்திருக்கிறதே தவிர பணக்கார வர்க்கத்தாருக்குக் கொடுக்கும் சலுகைகளைத் தொடவும் கூசுகின்றது என்பது தெளிவாகத் தெரிகின்றது. இதனல் ரேஷனிங்கின்—பங்கீட்டின்—உண்மையான அர்த்தத்தையே மறுப்பதாகின்றது.

ஆயினும் ஒரு குறிப்பிட்ட அளவு நாம் ஜனங்களைத் திரட்டினதின் பயனகவே சர்க்காரை ஒருபடி இறங்கி வரும்படியாகச் செய்திருக்கிறோம். இன்னும் இதைவிட அதிகமான அளவுக்கு ஜனசக்தியைத் திரட்டுவதின் மூலம் நிச்சயம் அதிகாரவர்க்கத்தை இன்னும் பணியவைக்க முடியும். மக்களின் கோரிக்கைகளுக்கு இணங்கும்படி செய்ய முடியும்.

## சர்க்காருக்கு எங்கும் தோல்வி

சென்னை அதிகாரவர்க்கத்தின் விஷயத்தில் மாத்திரமல்ல. இந்தியா வெங்கும் அதிகாரவர்க்கத்தின் திறமையற்ற நிர்வாகம், இவ்வாறுதான் சந்தி சிரிக்கும் நிலைமையிலிருக்கின்றது.

டில்லி மத்ய சட்டசபையின் சென்றவாரத்திய நடவடிக்கைகளை எடுத்துப் பாருங்கள்! ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவின் மீது அதிகாரவர்க்கம் விதித்த தடையுத்தரவை சட்டசபை அங்கத்தினர்கள் ஏகோபித்த முறையில் கண்டனம் செய்தனர். இதுவிஷயமாகக்கொண்டுவரப்பட்ட ஒத்திவைப்புத் தீர்மானத்தை, தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை அங்கத்தினர்கள் அனைவரும் ஆதரித்து ஓட்டுக் கொடுத்தனர். முஸ்லிம் லீக் அங்கத்தினர்களும் காங்கிரஸ் அங்கத்தினர்களுடன் சேர்ந்து ஓட்டுக்கொடுத்ததுதான் மிகவும் குறிப்பிடத்தக்க விஷயம். தேசத்தில் காங்கிரஸுக்கும் லீகுக்கும் இன்னும் ஒற்றுமை ஏற்படவில்லை; அப்படியிருந்தும் இவ்விஷயத்தில் லீகும் சர்க்காருக்கெதிராக ஓட்டுக் கொடுத்தது எதைக் காண்பிக்கிறது?

## ஒதுக்கப்பட்டிருக்கிறது

அதிகாரவர்க்கம் எவ்வளவுதூரம் மக்களிடமிருந்து ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதையே காட்டுகிறது. சரோஜினி நாயுடுவின்மேல் விதித்த தடையுத்திரவுக்கு எந்த நியாயமான காரணத்தையும் காட்ட சர்க்கார் ஹோம் மெம்பரால் முடியவில்லை.

இவ்விஷயத்தில் எந்தக் கட்சியையும் சேராத 2 உதிரிகள்தான் சர்க்காருக்கு சாதகமாக ஓட்டுக் கொடுத்தனர்.

ஆனல், மாகாணங்களில் "இந்தியப் பாதுகாப்புச் சட்டம்" என்ற பெயரால் நடக்கும் பயங்கர அடக்குமுறை ஆட்சியைக் கண்டித்து ஸ்ரீ காஸ்மி கொண்டுவந்த ஒத்திவைப்

V. ராதாகிருஷ்ணன்

புப் பிரேரணை விஷயத்தில் மேற்சொன்ன அந்த 2 உதிரிகளும் கூட சர்க்காருக்கு விரோதமாக மற்ற அங்கத்தினர்களுடன் சேர்ந்து ஓட்டுப் போட்டனர். தீர்மானம் வெற்றியடைந்தது.

அதிகாரவர்க்கத்தின் குட்டு அம்பலத்திற்கு வந்தது, அத்துடன் நின்றுவிடவில்லை.

## திறமையின்மை அம்பலத்தில்!

வங்கப் பஞ்சத்தைப்பற்றி மெம்பர்கள் கேட்ட கேள்விகளுக்கு உணவுமந்திரி ஜ்வாலா பிரசாத் ஸ்ரீவத்ஸவா கொடுத்த பதில்கள், அதிகாரவர்க்கத்தின் திறமையற்ற நிர்வாகத்தையும் கையாலாகாத்தனத்தையும் பளிச்சௌக் காண்பித்தது.

1943-ல் வங்கத்தில் பட்டினியால் இறந்தது எவ்வளவுபேர் என்று கேட்டதற்கு இன்னும் கணக்குகள் தயாராகவில்லையென்றும், வங்க மாகாண சர்க்காரின் புள்ளி விவரங்கள் சரியானவல்லவென்றும், இந்தியா மந்திரி லண்டன் காமன்ஸ் சபையில் சாவுப் புள்ளிவிவரம் கொடுத்தது, இந்திய சர்க்கார் கொடுத்த கணக்கின்பேரிலல்லவென்றும்...... இம்மாதிரியெல்லாம் பதிலளித்தார்.

வெட்கம்! வெட்கம்!! இப்பேர்ப்பட்ட அதிகாரவர்க்கத்தின் கையில்தான் ஜப்பானை எதிர்த்து எதிர்த்தாக்குதல் நடத்தும் பொறுப்பு இருக்கிறது! 40 கோடி இந்தியமக்களை ஆளும் அதிகாரம் இருக்கின்றது!

இந்த நிலைமையில் நாட்டுமக்களின் நம்பிக்கை பெற்ற காங்கிரஸ் தலைவர்கள் விடுதலையாகவேண்டியதும், சுய நிர்ணய உரிமையின் அடிப்படையில் காங்கிரஸ்—லீக் ஒற்றுமை ஏற்பட்டு தேசிய சர்க்கார் ஏற்படவேண்டியதும் எவ்வளவு அவசர அவசியமாயுள்ளது என்பதைச் சற்று சிந்தித்துப்பாருங்கள்!

## ச. தே. தொழிலாளர் மகாநாடு

இவ்வளவு திறமையற்ற, கையாலாகாத அதிகாரவர்க்கம், தன்னுடைய இந்தக் கையாலாகாத்தனம் வெளிநாடுகளிலே பூரணமாக அம்பலத்திற்கு வராமல் தடுக்கவோ என்னவோ இப்பொழுது ஒரு சூழ்ச்சியிலிறங்கி யிருக்கின்றது.

வருஷா வருஷம் சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபன மகாநாடு என ஒரு மகாநாடு ஸ்விட்ஸர்லாந்திலுள்ள ஜினிவா நகரத்தில் இதுவரை நடைபெற்றுவந்தது. அம்மகாநாட்டுக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் அந்நாட்டுத் தொழிற்சங்கங்களின் பிரதிநிதியாக ஒருவரை அந்நாட்டு சர்க்கார் அனுப்பிவைக்கும். அம்மகாநாட்டில் தொழிலாளிகளின் பாதுகாப்பு, நஷ்ட ஈடு, வேலைநேரம், தொழிற்சாலைகளில் சௌகர்யங்கள் பெண் தொழிலாளிகள் வேலை செய்வதற்குக் கட்டுப்பாடுகள் முதலியன பற்றி யெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றுவர்.

அம்மாதிரியான ஒரு மகாநாட்டில்தான் சுரங்கங்களில் பெண்களை வேலைக் கெடுத்துக்கொள்ளக்கூடாது என்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றியிருந்தனர். (இந்தத் தீர்மானத்தைத்தான் இப்பொழுது இந்திய சர்க்கார் மீறியிருக்கிறது.) அந்தத்தீர்மானங்கள் எல்லா நாட்டு சர்க்கார்களையும் கட்டுப்படுத்தும்.

அந்த சர்வ தேசத் தொழில்லாளர் மகாநாடுதான் இவ்வருஷம் அமெரிக்காவில் பிலடெல்பியா நகரத்தில் நடைபெறப்போகின்றது.

அதற்கு இந்தியாவின் பிரதிநிதியாக, இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸின் (A. I. T. U. C.) சார்பில், அதன் பொதுக்காரியதரிசி எம். என். ஜோஷியை, அதன் நிர்வாகக் கமிட்டி தேர்ந்தெடுத்துள்ளது. தேசம் பூராவும் உள்ள தொழிலாளர் ஸ்தாபனங்கள் இதை ஆதரித்திருக்கின்றன. இது நிற்க,

## அதிகாரவர்க்கத்தின் சூழ்ச்சி!

பிப்ரவரி 11-ந் தேதியன்று டில்லியிலிருந்து வந்த ஒரு செய்தியில், "சர்வ தேசத் தொழிலாளர் மகாநாட்டுக்கு இந்தியப் பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பதில் சிறிது தாமதம் ஏற்படுவதாக இருக்கின்றது; ஏனெனில் A. I. T. U. C. யைத் தவிர, 'இந்திய லேபர் பெடரேஷன் வேறே தொழிலாளர்களின் பிரதிநிதி ஸ்தாபனமாக விருக்கின்றது. ஆதலால் இவ்விஷயம் சர்க்காரால் தீவிரமாக கவனஞ் செலுத்தப்பட்டு வருகிறது" என்பதே அச்செய்தி,

இதிலிருந்து ஒரு விஷயத்தை நாம் ஊகிக்கவேண்டியிருக்கிறது. அதாவது "இந்திய லேபர் பெடரேஷன்" A. I. T. U. C.யை எதிர்க்கின்றது" என்ற நொண்டிச் சாக்கைக் கூறி இந்தியப் பிரதிநிதியை—உண்மையான இந்தியத் தொழிலாளர் பிரதிநிதியை அனுப்பாமலேயே செய்துவிடலாம் என்று அதிகாரவர்க்கம் சூழ்ச்சிசெய்வதாகத் தெரிகின்றது. இந்த நொண்டிச் சாக்கை முறியடித்து, இந்த சூழ்ச்சி நிறைவேறுமல் செய்ய வேண்டியது இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் கடமையாகும். ஏன்!

## ஏகப் பிரதிநிதி

அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ்தான் இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் ஏகப்பிரதிநிதி. சுமார் 6 லட்சம் தொழிலாளிகளைத் தன்னுள் கொண்டதாக இருக்கின்றது. 1926-லிருந்து பல போராட்டங்கள் நடத்தி இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் உரிமைகளைப் பாதுகாத்து வந்துள்ளது.

இன்று, நாட்டின் பிரதான தொழில்களாகிய, ரயில்வே, பஞ்சாலை, நிலக்கரி சுரங்கம் முதலிய தொழில்களில் வேலை செய்யும் பெரும்பான்மைத் தொழிலாளிகளின் ஸ்தாபனமாக இருக்கின்றது.

பழுத்த தொழிற் சங்கத் தலைவர்களான என். எம். ஜோஷி, டாங்கே, மிராஜ்கர், வி. ஆர். காளப்பா, வி. வி. கிரி. சக்கரை செட்டியார் முதலியவர்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

அதுமட்டுமா! இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் எப்பொழுதும் நம் நாட்டின் தேசிய இயக்கத்தையே சார்ந்து வந்துள்ளது. ஏன், தேசிய இயக்கம் பெற்றெடுத்த பிள்ளைதான் A. I. T. U. C. என்று சொன்னல் மிகையாகாது.

இதை எதிர்த்து, இதை சீர்குலைக்க இதைப் பிளவுபடுத்த பல துரோகிகள் முயன்றனர். ஒன்றும் பலன் பெறவில்லை. எல்லா எதிர்ப்புகளையும் மாய்த்து வளர்பிறைச் சந்திரனே போல் வளர்ந்து வந்துள்ளது.

## துரோகிகள் ஸ்தாபனம்

ஆனல் அதே சமயத்தில் "லேபர் பெடரேஷனை" எடுத்துக்கொள்ளுங்கள். A. I. T. U. C. யில் சேர்ந்துள்ள தொழில்ளர்களில் 100-க்கு ஒரு பங்குகூட அதில் கிடையாது. தேசத்தில் அதற்கு எங்கும் செல்வாக்கு கிடையாது. அதன் தலைவர்கள் யார்! எம். என். ராய்—தேசிய இயக்கத்தின் துரோகி எம். என். ராய்—தொழிலாளி வர்க்கத்துடன் சிறிதும் சம்பந்தமில்லாத எம் என். ராய்—அதிகார வர்க்கத்தின் குலாம் எம். என். ராய். பின், ஜம்னுதாஸ் மேத்தா—ரயில்வேத் தொழிலாளிகளுக்கு துரோகம் செய்த மேத்தா! ரயில்வே போர்டுக்கு தலையாட்டும் மேத்தா! தேசத் தலைவர்களின் விடுதலையை எதிர்க்கும்மேத்தா! இப்பேர்ப்பட்டநிலைமையிலிருப்பது இந்த "லேபர் பெடரேஷன்."

ஆதலால் உண்மைத் தொழிலாளர் பிரதிநிதியாகிய என். எம். ஜோஷியையே தேர்ந்தெடுத்து சர்வ

(7-ம் பக்கம் பார்க்க)

# உலக மக்களுக்கோர் வழிகாட்டி!

## ★ பூர்ண சுதந்திர சுயநிர்ணயம் பெற்ற சோவியத் சமூகங்கள் ★

பி. ராமமூர்த்தி

சோவியத் யூனியன் தோன்றிய காலம் முதற்கொண்டு உலகத்து முதலாளித்துவக் கும்பல்களைத் திணறடித்துக்கொண்டே வந்திருக்கிறது. 23 வருஷங்களாக, அதை ஒழித்துக் கட்டுவதற்காகச் செய்த முயற்சிகளெல்லாம் மண்ணைக் கவ்விவிட்டன. இன்று, அது எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் ஏதாவது 'சொட்டை, சொள்ளை'' கற்பிக்க இந்தக் கும்பல்கள் முயற்சிக்கின்றன. ஆனல், இதிலும் கூட ஏகோபித்த அபிப்பிராயம், முதலாளிக் கும்பல்களுக்குள்ளே கிடையாது. அவர்களுடைய வாதத்தில் முன்னுக்குப் பின் முரண்பாடும் கூட!

### பிற்போக்காளர் கூற்று!

சமீபத்தில் சோவியத் சட்டசபையில், சோவியத் அரசியல் திட்டத்தில் நிறைவேற்றப்பட்ட திருத்தங்கள், இந்தக் கும்பல்களை இன்னும் திகைக்க வைத்திருக்கின்றன. சோவியத் யூனியனுக்குள் இணைக்கப்பட்டுள்ள குடியரசுகளுக்கு, தனியான் ராணுவங்களை அமைத்துக்கொள்ளவும், அயல்நாடுகளுடன் தனியாக ராஜதந்திர, ஸ்தானிக உறவுகள் ஏற்படுத்திக்கொள்ளவும், இந்தத் திருத்தங்களின் மூலம் உரிமை வழங்கப்பட்டது. இது எப்படி சாத்தியம்! சர்வாதிகாரப் பிரியரான ஸ்டாலினு அதிகாரத்தை விட்டுக் கொடுப்பவர்! முக்காலும் இல்லை! இந்தத் திருத்தங்களெல்லாம் கவைக்குதவாத வெறும் ஏட்டுச் சுரக்காய்கள். உலகமக்களை ஏமாற்றுவதற்காக நடிக்கப்படும் ஜகஜ்ஜாலப் புரட்டு! இதில் ஏதோ பெரிய சூழ்ச்சி இருக்கத்தான் வேண்டும்" என்றெல்லாம் பல பத்திரிகைகள் எழுதுகின்றன. நம் நாட்டிலுள்ள சில 'தேசீய'ப் பத்திரிகைகள் கூட இந்த கோஷத்தையே கிளப்பிவிட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் மிகமிகப் பிற்போக்கான பகுதிகளால் நடத்தப்படும் லண்டன் "எகனமிஸ்டு" போன்ற பத்திரிகைகள்தான், இந்த "தேசிய"ப் பத்திரிகைகளின் குருமார்களாக விளங்கும் அபூர்வக் காட்சியை இன்று நம்முடைய தேசிய அரங்கத்தில் காண்கிறோம்.

ஆனல், சோவியத் யூனியன் தோன்றி வளர்ந்துவந்துள்ள சரித்திரத்தையும், அதன் அடிப்படையையும், நன்குணர்ந்தவர்களுக்கு இது எவ்விதத் திகைப்பையும் உண்டு பண்ணுது. அது தோன்றிய காலம் முதற்கொண்டு சுரண்டப்பட்ட மக்களுக்கு வழிகாட்டியாய் நிற்கும் தீபஸ்தம்பமாய் விளங்கி வந்திருக்கிறது. இன்று, இந்த நடவடிக்கையின் மூலம், அந்த தீபஸ்தம்பத்தின் சுடர் விளக்கு, இன்னும் பிரகாசிக்கின்றது.

### போல்ஷிவிக் கட்சியின் முடிவு

சோவியத் புரட்சி ஏற்படுவதற்கு பலவருஷங்களுக்கு முன்னமேயே, ரஷ்ய போல்ஷவிக் கட்சி, தேசீய இனங்களின்பால் சரியான கொள்கையை வகுத்துக்கொண்டது. 1913 வது வருஷத்தில் நடந்த கட்சி மகாநாட்டில், தோழர் ஸ்டாலின் ஸமர்ப்பித்த ரிபோர்ட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டு, ஒரு தீர்மானம் நிறைவேறியது. எல்லா தேசிய இனங்களுக்கும் சுயநிர்ணய உரிமை வழங்கப்பட வேண்டும். விருப்பப்பட்டால் அவை பிரிந்து போவதற்கும் உரிமை வேண்டும் என்று கூறியது அத்தீர்மானம்.

1917-ம் ஆண்டில், ஜார் மன்னன் வீழ்ந்தான். உடனே சோவியத் ஆட்சி ஏற்பட்டுவிடவில்லை. தற்காலீக சர்க்கார், முதலாளிக் கட்சிகளின் தலைமையில் ஏற்பட்டது இந்த சர்க்காரும், நவம்பர் 7-ந் தேதியன்று தொழிலாளிகளால் வீழ்த்தப்பட்ட பிறகுதான் சோவியத் ஆட்சி ஏற்பட்டது. சோவியத் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னமேயே, ஏப்ரல் மாதத்தில் கூடிய ரஷ்ய போல்ஷவிக் கட்சி மகாநாட்டில், மீண்டும் இந்த உரிமை ஊர்ஜிதம் செய்யப்பட்டது.

### உரிமைச் சாஸனம்

"ரஷ்யாவில் உள்ள எல்லா தேசங்களுக்கும், சுயேச்சையாகப் பிரிந்துபோய், சுதந்திர ராஜ்யங்களை அமைத்துக் கொள்ளும் உரிமை, அங்கீகரிக்கப்படும். இந்த உரிமையை மறுப்பதும், நடைமுறையில் இந்த உரிமையை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு உத்திரவாதம் அளிக்கக் கூடிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளாமல் இருப்பதும், பிற நாடுகளைப் பிடித்து அடிமைப் படுத்தும் கொள்கையை ஆதரிப்பதாகும். தேசீய இனங்கள் பிரிந்து போகும் உரிமையை அங்கீகரிப்பதன் மூலமாகத்தான், பல்வேறு தேசீய இனங்களைச் சேர்ந்த தொழிலாளி மக்களின் பரிபூரண ஒற்றுமைக்கும், பல்வேறு தேசீய இனங்கள் உண்மையான ஜனநாயக முறையில் பரஸ்பரம் இணைவதற்கும் தொழிலாளி வர்க்கம் உதவியளிக்க முடியும்'' என்று கூறியது அந்தத் தீர்மானம்.

போல்ஷிவிக் கட்சியின் தலைமையின் கீழ், ரஷ்யத் தொழிலாளி வர்க்கம் ஆதிக்கத்துக்கு வந்து, சோவியத் ஆட்சி ஏற்பட்ட எட்டாவது நாள், 1917-ம் ஆண்டு நவம்பர் 15-ந் தேதியன்று, லெனினும், ஸ்டாலினும் கையெழுத்திட்டு, தேசீய இனங்களின் சாஸனத்தை வெளியிட்டனர். இந்த சாஸனத்தின் மூலம் சோவியத் சர்க்கார், ரஷ்யாவிலுள்ள தேசீய இனங்களுக்குக் கீழ்க் கண்ட உரிமைகளை வழங்கிற்று.

1. ரஷ்யாவிலுள்ள தேசீய இனங்களெல்லாம் சம அந்தஸ்து வாய்ந்தவை; சுதந்திர அரசாங்க உரிமை கொண்டவை.
2. ரஷ்யாவிலுள்ள தேசீய இனங்களுக்கு சுதந்திரமாக சுய—நிர்ணய உரிமை உண்டு; தனியாகப் பிரிந்துபோய், தனியான ராஜ்யங்களை ஸ்தாபிக்கும் உரிமையும் உண்டு.
3. சில தேசீய இனங்களுக்கும், குறிப்பிட்ட மதஸ்தர்களுக்கும் காட்டப்பட்டு வந்த சலுகைகளும், மற்ற தேசீய இனங்களுக்கும் மதஸ்தர்களுக்கும் இருந்துவந்த நிர்ப்பந்தங்களும் இந்த சாஸனத்தால் ரத்துசெய்படுகின்றன.

### தலையீட்டு யுத்தங்கள்

சோவியத் புரட்சி ஏற்பட்டவுடன் இன்றைக்குள்ள மாதிரி ஒரே சமஷ்டி அரசாங்கம் ஏற்பட்டுவிடவில்லை. ரஷ்ய சோஷியலிஸ்டு குடியரசுகள் சமஷ்டி, உக்ரேனியன் குடியரசு, வெள்ளை ரஷ்யக் குடியரசு, டிரான்ஸ் காகேஷியக் குடியரசுகள் சமஷ்டி, என்று நான்கு தனியான ராஜ்யங்கள் இருந்தன. இந்த சோவியத் குடியரசுகளை நசுக்கிவிட்டு, முதலாளித்துவத்தை மீண்டும் நிலைநாட்ட, உள்நாட்டு முதலாளி, நிலச் சுவான்தார்களும், வெளியிலிருந்துஏகாதிபத்திய வல்லரசுகளும் 3 வருஷ காலம் யுத்தத்தை நடத்தின. எனவே, இந்தப் பொது சத்துருக்களை எதிர்த்துப் போராடுவது அவசியமாயிற்று.

### குடியரசுகளின் தீர்மானம்

இந்த நிலைமையில், 1919ஆ மே மாதம் 18-ம் தேதியன்று, உக்ரேனியன் சோவியத் குடியரசின் நிர்வாகக் கமிட்டி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றிற்று.

"எல்லா சோவியத் குடியரசுகளுக்கும் முன்னே இன்று பொதுவான சத்துரு இருக்கிறுன். ஆகவே, இந்தக் குடியரசுகளெல்லாம் ஒரே தலைமையின் கீழ், பொதுவான போராட்டத்தை நடத்த வேண்டுவது அவசியமாகின்றது. இந்தப் போராட்டத்தில், ஒவ்வொரு குடியரசின் சக்தியையும் சரியாகப் பாதுகாப்பதற்காக, இச்சக்திகளையெல்லாம் ஒன்ருகத் திரட்டி, ஒருமுகப்படுத்தி, பொதுவானதோர் திட்டத்தின் கீழ், வேலை செய்ய வேண்டுவது அவசியமாகிறது" என்று அத்தீர்மானம் கூறிற்று. இந்தக் கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவதற்காக சில திட்டமான யோசனைகளையும் அத்தீர்மானம் கூறிற்று.

வெள்ளை ரஷ்ய சோவியத் குடியரசும் இதே போன்ற தீர்மானத்தை நிறைவேற்றியது. அதற்கப்பால், ஒன்றன்பின் ஒன்ருக, மற்றக் குடியரசுகளும், பொது சத்துருவை எதிர்ப்பதற்காக, ஒன்றுபட வேண்டிய அவசியத்தை உணர்ந்து, தீர்மானங்களை நிறைவேற்றின.

### எப்பேர்ப்பட்ட ஒற்றுமை?

1919-க்கும் 1922-க்கும் இடையே நடந்த புரட்சி—எதிர்ப்பு யுத்தத்தின் விளைவாக, ரஷியக் குடியரசுக்கும், மற்றக் குடியரசுகளுக்கும் ஒப்பந்தங்கள் ஏற்பட்டன. லட்சக்கணக்கான மக்களின் இரத்தத்தினுல் இணைக்கப்பட்ட, இந்த ஒற்றுமை சீக்கிரத்தில் முறிந்துவிடுமா? நடைமுறையில் ஏற்பட்ட ஐக்கியமல்லவா இது? தனித்து நின்ருல் மீண்டும் புரட்சியினுல் ஏற்பட்டவெற்றிகளையே ஏகாதிபத்தியங்கள் நாசம் செய்துவிடும் என்பதை இம்மக்கள் உணராமலிருப்பார்களா? அதுவும், 4 வருஷ ஏகாதிபத்திய யுத்தமும், 3 வருஷ புரட்சி—எதிர்ப்பு யுத்தங்களும் நாட்டின் பொருளாதார வாழ்க்கையையே சீர்குலைத்திருந்த காலம் மீண்டும் புதிய அஸ்திவாரத்தில்—சோவியத் ஆட்சியின் அஸ்திவாரத்தில்—புதிய சமூகப் பொருளாதார வாழ்க்கையை நிர்மாணிக்கவேண்டிய காலம் அது. ஆகவே, அந்தக் குடியரசுகளெல்லாம் ஒன்றுபடுவதில்—ஒரே சமஷ்டியில் சேருவதில்—என்ன ஆச்சர்யமிருக்கிறது? உள்நாட்டுக் கலக யுத்தமும், புரட்சி-எதிர்ப்பு யுத்தமும், முடிந்தபிறகு 1922-ல் இந்தத் தனிக் குடியரசுகளெல்லாம் சேர்ந்து, ஒரே சமஷ்டியை—ஐக்கிய சோவியத் சோஷலிஸ்டுக் குடியரசை—ஸ்தாபித்தன. அகில சோவியத் காங்கிரஸில் இந்தத் தீர்மானத்தைப் பிரேரேபித்த தோழர் ஸ்டாலின் அன்று பேசிய மணிவாக்குகளை இங்கு வாசகர்களுக்கு ஞாபகப்படுத்துகிரேம்.

### ஸ்டாலின் தீர்க்கதிருஷ்டி

"சோவியத் ஆட்சியின் சரித்திரத்தில், முக்கியமானதொரு கட்டத்தை இன்றைய தினம் துவக்கியிருக்கிறது. கடந்துபோன காலத்திற்கும், இன்று துவக்கப்பட்டுள்ள புதிய காலத்திற்கும் இடையில் உள்ள ஒரு மைல் கல்லாகும் இந்நன்னுள். கடந்துபோன காலத்தில் சோவியத் குடியரசுகள், ஒன்ருேடொன்று சேர்ந்து வேலைசெய்த போதிலும், தனித்தனியாகவே வளர்ந்து வந்தன; தனியாக உயிர்வாழ்வதா அல்லவா என்ற பிரச்சினையிலேயே அவைகள் ஈடுபட்டிருந்தன. இந்தப் புதியகாலத்தில், சோவியத் குடியரசுகளின் தனிவாழ்க்கை முடிவடைகிறது. இந்தக் குடியரசுகளெல்லாம், ஒரே ஐக்கிய ராஜ்பத்தில் பொருளாதாரச் சீருலைவை எதிர்ப்பதற்காக ஒன்று சேர்கின்றன. தான் உயிர்வாழ்வது மாத்திரமல்ல சோவியத் அரசாங்கத்தின் முன் நிற்கும் பிரச்சினை. ஆனல் ஒரு மாபெரும் சர்வதேச சக்தியாக வளர்வது—சர்வதேச நிலைமையை உருவகப்படுத்தும் பலம் பொருந்திய சக்தியாக—சர்வதேச நிலைமையை தொழிலாள மக்களின் நன்மைக்குகந்தவாறு மாற்றியமைக்கக்கூடிய சக்தியாக வளர்வதும், இன்று சோவியத் அரசாங்கத்தின் முன்னுள்ள பிரச்சினையாகும்.

### தேசீய இனங்கள் மறுமலர்ச்சி

இவ்வாறு ஸ்தாபிக்கப்பட்ட சோவியத் யூனியனின் அரசியல் சட்டம் 1924-ல் வகுக்கப்பட்டது. அதில் சேர்ந்த தேசீய இனங்களின் சுயநிர்ணய உரிமை அந்தத் திட்டத்திலும் அங்கிகரிக்கப்பட்டது. சம-அந்தஸ்தை அடிப்படையாகக் கொண்ட இச்சட்டத்தின் கீழ், சோவியத் மக்கள் முன்னேறினர். உள்நாட்டிலுள்ள முதலாளிக் கும்பல்களும், நிலச்சுவான்தாரிக் கும்பல்களும் மீண்டும் தலைதூக்கவொட்டாமல் வீழ்த்தப்பட்டன. வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்பட்டது. தொழில்கள் அமோகமாக எல்லாக் குடியரசுகளிலும் வளர்ந்தன. விவசாயம், கூட்டுப்பண்ணை முறையில் திருத்தியமைக்கப்பட்டது. சோஷியலிஸம் வெற்றியடைந்தது. பல்வேறு தேசிய இனங்களும், என்றைக்கும் இல்லாதவாறு மலர்ந்து வளர்ச்சியடைந்தன.

நிலைமையில் ஏற்பட்ட மாறுதல்களையொட்டி, 1936ல், புதிய அரசியல் திட்டம்வகுக்கப்பட்டது இந்தத் திட்டத்தின் கீழ், இன்னும் புதிய குடியரசுகள் சிருஷ்டிக்கப்பட்டன அவைகள் ஒவ்வொன்றிற்கும் பிரிந்துபோகும் உரிமையும் அங்கீகரிக்கப்பட்டது.

### பரஸ்பர நம்பிக்கை; ஒற்றுமை

சோவியத் யூனியனில் உள்ள தேசிய இனங்களுக்கிடையே ஏற்பட்ட பரஸ்பர நம்பிக்கைக்கும், ஒற்றுமைக்கும் அத்தாட்சியே இந்தப் புதிய அரசியல் திட்டம். இந்தத் திட்டத்தைப் பிரேரேபித்த ஸ்டாலினுடைய பேச்சையே கேளுங்கள் :—

"இன்றைக்கு அமுலிலிருக்கும் அரசியல் திட்டம் 1924 ல் வகுக்கப்பட்டது. சோவியத் யூனியனிலுள்ள பல்வேறு தேசிய மக்களிடையேயுள்ள பரஸ்பரத் தொடர்புகள் சரிவர அமைக்கப்படாத காலம் அது. ரஷ்ய மக்களிடம் மற்ற மக்களுக்கு நீண்டகாலமாக இருந்துவந்த அவநம்பிக்கையின் சின்னங்கள் பரிபூர்ணமாக மறையாமலிருந்த காலம் அது; மத்தியிலிருந்து பிரிந்துபோகும் சக்திகள் இன்னும் வேலை செய்து கொண்டிருந்த காலம் அது. (ஒற்றுமைக்கு பங்கம் விளைவிக்கக் கூடிய சக்திகள் நிறைந்த) இந்த நிலைமைகளில், தேசியமக்களுடைய சகோதர ஒத்துழைப்பை ஏற்படுத்துவது அவசியமாயிருந்தது. அரசியல், பொருளாதார, இராணுவத் துறைகளில் பரஸ்பர உதவியை அடிப்படையாகக்கொண்ட அவர்களை, பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட ஒரே சமஷ்டியில் ஐக்கியப் படுத்தவேண்டியிருந்தது. முதலாளித்துவ நாடுகளில், பல்வேறு தேசிய இனங்களை ஒன்ருக இணைத்து, ஒரே ராஜ்பத்தை ஏற்படுத்திய முயற்சிகளெல்லாம் தோல்வியடைந்திருக்கின்றன. ஆஸ்ட்ரிய மக்களையும், ஹங்கேரிய மக்களையும், இணைத்து சிருஷ்டித்த ராஜ்யம் சீரழிந்தது. இந்த உதாரணங்களெல்லாம் இருந்தபோதிலும், பல்வேறு தேசியஇனங்களைக் கொண்ட ஒரு அரசாங்கத்தைச் சிருஷ்டிக்கும் முயற்சியைச் செய்வது என்றே சோவியத் யூனியன் தீர்மானித்தது. ஏனெனில்,

பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட அரசாங்கம், சோஷியலிஸத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தால் எந்தப் பரீட்சையிலும் தேர்ச்சிபெறும் என்பது தெளிவு

அன்று முதற்கொண்டு 14 வருஷங்கள் கடந்துவிட்டன. இன்று நாம் காண்பது என்ன! ......நம்முடைய முயற்சி பரிபூரணமாக வெற்றியடைந்திருக்கிறது. லெனின் வகுத்த தேசீய இனங்களின் கொள்கையின் வெற்றியே இது.

### சுரண்டும் வர்க்கமில்லை

இந்த வெற்றிக்குக் காரணம் என்ன! சுரண்டும் வர்க்கங்கள் இல்லாமலிருப்பதே இதற்குக் காரணம். தேசிய இனங்களிடையே, சுரண்டும் வர்க்கங்கள் தான் பூசல்களை உண்டாக்குகின்றன. சுரண்டல் முறை சோவியத் யூனியனில் இல்லாமையே இந்த வெற்றிக்குக் காரணம். சுரண்டல் முறையினுல் தான், தேசிய இனங்களிடையே வெறுப்பையும், பரஸ்பர அவநம்பிக்கையையும் தூண்டிவிடுகிறது. சோவியத் யூனியனில், அதிகாரம் தொழிலாளி கையிலிருப்பது, இந்த ஒற்றுமைக்குக்காரணம். தொழிலாளி வர்க்கம் அடிமைத்தனத்தின் பரம விரோதியல்லவா! ஸர்வ தேசிய உணர்ச்சியின் வாகனமல்லவா! சமூகப் பொருளாதார வாழ்க்கை பூராவிலும், எல்லா மக்களும், பரஸ்பரம் உதவி புரிந்து கொண்டிருப்பது இந்த ஒற்றுமைக்குக் காரணம். கடைசியாக, சோவியத் யூனியனில் உள்ள எல்லாப் பிரதேசங்களிலும் தேசீயக் கலை மலர்ந்து கொண்டு வருவது இந்த ஒற்றுமைக்குக் காரணம். இந்தக் கலை தேசிய உருவத்தில், ஆனல் சோஷியலிஸ்டு சாரத்தைக் கொண்டு, வளர்ந்து வருகிறது. இவைகளும், இவை போன்ற மற்ற காரணங்களும், சோவியத் யூனியனிலுள்ள மக்களின் மனேபாவத்தையே அடிப் படையாக மாற்றிவிட்டன. அவர்களிடையே இருந்து வந்த பரஸ்பர அவநம்பிக்கை மறைந்துவிட்டது பரஸ்பர சிநேகப் பான்மை அவர்களிடையே வளர்ந்துவிட்டது...

இதன் விளைவாக, பல்வேறு தேசீய இனங்களைக்கொண்ட ஒரு சோஷியலிஸ்டு ராஜ்யம்பரிபூரணமாக ஸ்தாபிக்கப்பட்டு விட்டது. இது எல்லாப் பரீட்சைகளிலும் தேர்ச்சியடைந்துவிட்டது. ஒரே தேசீய இனத்தைக் கொண்ட எந்த முதலாளித்துவ அரசாங்கமும் பொருமைப்படக் கூடிய அளவிற்கு, இந்த ராஜ்யம், ஸ்திரப்பட்டுவிட்டது" என்று ஸ்டாலின் 1936-ல் கூறினர்.

எனவே, சோவியத் யூனியனின் அரசியல் திட்டம், மேலிருந்து திணிக்கப்பட்ட திட்டமல்ல. நடைமுறையில், ஜனங்களுக்கு ஏற்பட்டுள்ள அனுபவத்தை அஸ்திவாரமாகக் கொண்டு வளர்ந்து வருவது சோவியத் அரசியல்.

### படிப்படியாக முன்னேற்றம்

சோவியத் யூனியன் ஸ்தாபிக்கப்பட்ட 20-வது ஆண்டு விழாவின் போது சோவியத் யூனியனின் தலைவர் காலினின் கூறியதைப் போன்று, "அது.........படிப்படியாக ஐக்கிய ராஜ்யமாக வளர்ந்திருக்கிறது. ஒவ்வொரு படியும், குறுகிய காலத்தியதாக இருந்தபோதிலும், முன்னேற்றப் பாதையில் எடுத்து வைத்தபடியாகும்; தேசிய இனங்களின் ஐக்கியத்திற்காக எடுத்துவைக்கப்பட்டபடியாகும்; அரசாங்கக் கருவியின் அமைப்பை நன்கு பரிசோதிக்க ஜனங்களுக்கு சந்தர்ப்ப மளிக்கப்பட்டது; அதை அமுல் நடத்துவதில், அவர்களுக்கு ஏற்பட்ட நடைமுறை அனுபவத்திலிருந்து, இந்த அமைப்பில் உள்ள குறைபாடுகளைப் பார்க்க அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்தக் குறைபாடுகளைப் பார்த்தவுடன், அடுத்த படியை எடுத்துவைத்து, வாழ்கையின் தேவைகளுக்குத் தக்கவாறு அரசாங்க அமைப்பை மாற்றிக்கொள்ள, அவர்கள் ஆர்வம்கொண்டனர்."

சோவியத் யூனியனின் வளர்ச்சியில் இன்று புதிய கட்டம் ஏற்பட்டிருக்கிறது புதிய நிலைமைக்குத் தகுந்தாற்போன்று, அரசியல் அமைப்பையும் திருத்தியமைத்துக்கொள்ள வேண்டியது அவசியமல்லவா? அதைச் செய்வதற்கு சோவியத் யூனியன் தயங்கவில்லை. அதுதான் இந்த அரசியல் சட்டத் திருத்தங்களாகத் திகழ்ந்திருக்கின்றன.

இன்று - என்ன அப்படிப்பட்ட மாறுதலான நிலைமை என்று கேட்கலாம்.

### புதிய நிலைமைக்கு புதிய அமைப்பு

சோவியத் யூனியனை உலகத்து மக்களிடமிருந்து தனியாக ஒதுக்கி வைக்க முயற்சிசெய்தகாலம் மலையேறிவிட்டது இனி அதை ஒதுக்கி வைக்கவும் முடியாது. பிராவ்தா பத்திரிகைகூறுவதுபோன்று "யுத்த காலத்தில் ஹிட்லரை எதிர்த்து நிற்கும் நாடுகளுக்குள்ளே ஒத்துழைப்பு அதிகரித்ததோடு, யுத்தத்திற்குப் பிறகும் பரஸ்பர க்ஷேமலாபங்களுக்கு,

(7-ம் பக்கம் பார்க்க)

## தேசீய அரங்கத்தில் முஸ்லிம் லீக்

# 1922 ஒத்துழையாமைப் போராட்டம் முஸ்லீம்கள் கலந்துகொண்டதேன் ?

*[1916 ல் ஏற்பட்ட லக்னோ ஒப்பந்தத்தைப்பற்றி சென்ற வாரம் கண்டோம். ஒப்பந்தத்திற்குப் பின் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை வளர்ந்தது. அதற்கு மேல் நடந்ததை இந்த வாரம் கவனிப்போம்.]*

**1914**-ம் வருடம் ஆரம்பித்த மகாயுத்தம் முடிந்தது. கூடவே சமாதானம், சுபிக்ஷம், சுதந்திரம் வருமென்று உலக மக்கள் எண்ணினர். ஆனால் அவை வரவில்லை, அதற்குப் பதிலாக பொருளாதார நெருக்கடிதான் முற்றிற்று. மக்களுடைய துன்பங்கள் பெருகின

### ஏகாதிபத்திய எதிர்ப்பு

சுதந்திரத்தை எதிர்பார்த்த இந்தியர் ஏமாந்தனர். சுதந்திரத்திற்கு பதில் ரவுலட் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. நான்குபேர்களுக்குமேல் கூடக்கூடாது! யாரையும் எந்த நிமிஷத்திலும் பிடித்துச் சிறையில் தள்ளலாம்! மறு பேச்சுப் பேசக் கூடாது! விசாரணை கிடையாது! ஜாலியன்வாலா பாக்கில் இந்தியர்கள்—ஹிந்து, முஸ்லிம், சீக்கியர்கள்—சுட்டுக் கொல்லப்பட்டனர். பாய்னெட்டால் குத்தப்பட்டனர்; மார்பினுல் ஊர்ந்து செல்லும்படி துன்புறுத்தப்பட்டனர்; பெண்கள் மானம் காற்றில் பறந்தது.

இந்தியாவிற்கு வெளியே முஸ்லிம்களுடைய நாடு துருக்கி; ஏகாதிபத்திய வல்லரசுகள் பங்குபோட்டுக் கொண்டன. ஜார் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து 19 கோடி ரஷ்ய மக்கள் போராடி, மாபெரும் சோஷியலிஸ்ட் புரட்சியைச் செய்து பரிபூரண விடுதலையடைந்துவிட்டனர். கீழ்நாடுகள் ஒவ்வொன்றிலும் விடுதலை இயக்கங்கள் தலை தூக்க ஆரம்பித்து ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டங்கள் நடக்க ஆரம்பித்துவிட்டன.

இவை யாவும் இந்தியர்களை மிகவும் பாதித்தன. இந்திய மக்களின் உணர்ச்சி —தேச பக்தி—சுதந்திர ஆர்வம்—தட்டி எழுப்பப்பட்டது. "விடுதலை! விடுதலை! விடுதலை!" என்ற கோஷம் முதன் முதலில் எழுந்தது. காங்கிரஸ் தலைவர்களான மஹாத்மா காந்தி, பண்டித மோதிலால் நேரு, சித்தரஞ்சன்தாஸ், முதலியவர்கள் தலைமையின்கீழும், முஸ்லிம் தலைவர்களான மௌலானா முகமது அலி, ஷௌக்கத் அலி, டாக்டர் அன்சாரி, மௌலானா அபுல்கலாம் ஆஜாத் முதலியவர்களுடைய தலைமையின் கீழும் ஒரு மா பெரும் பொதுஜன இயக்கம் கடல் மடை திறந்த வெள்ளம்போல் இந்த நாட்டில் உள்ள சகல மக்களையும் ஈர்த்துச் சென்றது.

### போராட்டம்

இந்த இயக்கத்தில் முக்கியமாக மூன்று ஸ்லோகங்கள் கொடுக்கப்பட்டன. (1) சுயராஜ்யம் (2) ரவுலட் சட்டம் ஒழிக! (3) கிலாபத் (அதாவது மத்தியக் கிழக்கிலுள்ள அரேபிய முஸ்லிம் நாடுகளுக்கு விடுதலை) நம் நாட்டின் சரித்திரத்திலேயே இந்த மாதிரி ஒரு இயக்கத்தை நாம் கண்டதில்லை. இந்தியர்களுடைய புராதனப் பெருமை, வீரம், தேசபக்தி ஆகிய எல்லாம் பெருக்கெடுத்தோடின. நம்முடைய இரண்டு தேசிய ஸ்தாபனங்களும்—காங்கிரஸ் முஸ்லிம் லீக் சேர்ந்த கிலாபத் மஹாநாடு—சேர்ந்து கூட்டங்கள் கூட்டின; அணி வகுப்புகள் நடத்தின; ஆரவாரஞ் செய்தன. ஒரே மேடையின்மீது ஹிந்து தலைவர்களும் முஸ்லிம் தலைவர்களுந் தோன்றினர்கள். ஆயிரக்கணக்கான ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்துகொண்டனர்; சிறைப் புகுந்தனர்; தடியடியைத் தாங்கினர், வீதியெல்லாஞ் செங்கிறக் குருதி ஆருய் ஓடிற்று; முஸ்லிமுடைய இரத்தம், ஹிந்துவின் இரத்தத்தோடு வீதியில் கலந்தது.

காங்கிரஸும், முஸ்லிம் லீக்கும்—கிலாபத் கமிட்டி சேர்ந்து நடத்திய இப்போராட்டத்தைக் கண்டு ஏகாதிபத்தியம் நடுங்கிற்று.

### ஏன் போராடினர் ?

எதற்காக இந்திய முஸ்லிம்கள் இவ்விதம் போராடினர்கள்! துன்பத்தைப் புன்முறுவலுடன் ஏற்றுக் கொண்டனர்; எதற்காக! நன்றாக ஆராய்ந்து பார்த்தால் இரண்டு விஷயங்களுக்காக அவர்கள் போராடினர்கள் என்பது தெளிவாகும். முதலில் "இந்திய சுயராஜ்யத்"திற்காக அவர்கள் போராடினர்கள். அதாவது தங்களை அடக்கிச் சுரண்டி வரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை இந்தியாவிலிருந்தே விரட்டுவதற்காக அவர்கள் போராடினர்கள். இதை யாராலும் மறுக்க முடியாது.

இரண்டாவதாக அவர்கள் எதற்காகப் போராடினர்கள் என்பதை நன்கு புரிந்துகொள்ளவேண்டும். அதைப் புரிந்துகொண்டால்தான் இன்றைய பாக்கிஸ்தான் கோரிக்கையைப் புரிந்துகொள்ள முடியும். அன்றிருந்த அரசியல் அறிவு வளர்ச்சியில் இந்த இரண்டாவது காரணத்தை யாரும் சரியாக விளக்கவில்லை; அந்தக் காரணமும் ஒரு கோரிக்கையாக உருவடையவில்லை. தேசிய இனம் என்ற உணர்ச்சிதான் அது. அது என்ன என்பதைப் பார்ப்போம்.

### தேசீய இன உணர்ச்சி

தமிழர்கள் தமிழ் மொழி, தமிழ்க் கலை, தமிழ் நாகரீகத்தை வளர்க்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடினர்கள்; சுயராஜ்ய இந்தியாவில் தெலுங்கு பாஷை வளர்ந்து

### இஸ்மத் பாஷா

ஆந்திர நாடு உயர்வடையும் என்று ஆந்திரர்கள் நினைத்துப் போராடினர்கள்; சுதந்திர இந்தியாவில் வங்காளம் உயர்வடையும் என்று வங்காள முஸ்லிம்கள் எண்ணினர்; இதைப்போல் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு இனத்தினரும் "சுயராஜ்யம்" என்ற வார்த்தைக்கு தங்களுடைய பாஷையின் மூலம் தங்களுடைய பழக்க வழக்கங்கள், கலாச்சாரங்களை யொட்டி பொருள்கொள்ளுகிறார்கள். சுதந்திர இந்தியாவில் சுரண்டல் இருக்காது; ஏழை இருக்கமாட்டான்; கஷ்டம் இருக்காது என்று ஒவ்வொருவரும் எண்ணுகிறார்கள். எண்ணும்போது அதைத் தங்களுடைய சொந்த பாஷையின் மூலம் பழக்க வழக்கங்களையொட்டியே எண்ணுகின்றனர். இந்தியன் என்ற உணர்ச்சியைவிட தமிழன் என்ற உணர்ச்சி நமக்குமுன் நிற்கிறது; வங்காளத்தைப்பற்றி ஏதாவது தவருகச்சொல்லிவிட்டால் வங்காளிக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிடும். வடமேற்கு எல்லைப்புறத்தில் வசிக்கும் பட்டாணியன், வங்காள முஸ்லிம்களோடு சேர்ந்து வசிக்க முடியாமல் திண்டாடுகிறான்: மதம் ஒன்றாக இருந்தபோதிலும் பாஷை, பழக்க வழக்கம், நாகரிகம் முதலியவை பட்டாணியர்களுக்கும் வங்காளிகளுக்கும் வெவ்வேறாக இருக்கின்றன. தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள ஒரு கிராமத்திலிருந்து லாஹூருக்குப் போய் ஒரு முஸ்லிம் வசிக்கிறான்; எவ்வளவுதான் பஞ்சாபி பாஷையை கற்று பஞ்சாபி முஸ்லிம்போல் இருந்தாலும், தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள தன் கிராமத்தை மறப்பதில்லை; ஒரு தரம் தன் கிராமத்திற்குப் போய்வர வேண்டும் என்ற எண்ணம் அவனை வாட்டுகிறது. லாஹூரில் எவ்வளவோ இந்தியர்களை அவன் சந்தித்த போதிலும், தமிழ் நாட்டிலிருந்து வரும் ஒரு தமிழனை சந்தித்துத் தமிழ் நாட்டைப்பற்றி விசாரிக்கும்போது வரும் சந்தோஷம் எப்பொழுதும் ஏற்படுவதில்லை.

பரந்த ஒரு பெரிய நாடாக இந்தியா இருந்தபோதிலும், பல இனத்தினரைத் தன் வயம் கொண்டிருக்கிறது. ஒவ்வொருவரும் தாங்கள் பிறந்து வளர்ந்த பிரதேசத்தையே முதன் முதலில் நேசிக்கின்றனர். அந்தப் பிரதேசத்தின் பெருமையே அவர்களுடைய வாழ்க்கைப் பெருமையாக இருக்கிறது. இதை யாரும் மறுக்கமாட்டார்கள்.

1922-ல் போராடிய பஞ்சாப், எல்லைப்புறம், சிந்து, வங்காள முஸ்லிம்கள், இந்திய சுயராஜ்ஜியத்தோடு, தங்களுடைய சொந்த இருப்பிடத்திற்காகவும் போராடினர்கள்.

இந்த சொந்த இருப்பிடத்தின் விடுதலையின்பாலுள்ள பற்றே, அவர்கள் அன்று போராடியதற்கு இரண்டாவது காரணம். அன்றைய அரசியல் அறிவு வளர்ச்சியில் அது இன்று தெரிவதுபோல் அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை; இன்னதுதான் என்று வரையறுக்கப் படவுமில்லை.

### வகுப்பு உணர்ச்சியல்ல

முஸ்லிம் நாடுகள் யாவற்றையும் ஒரேயொரு கலிபாவின் கீழ் கொண்டு வரவேண்டும் என்று கூறி, கிலாபத் இயக்கம் வகுப்புப் போர்வையைப் போர்த்திக்கொண்டிருந்த போதிலும், இந்த மத உணர்ச்சியினுல்தான் முஸ்லிம்கள் போராடினர்கள் என்று சொல்லுவது தவறு. இந்தியாவிற்கு வெளியே உள்ள சகோதர முஸ்லிம் மக்கள் நடத்திய ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கமும், தங்களுடைய சொந்த குடியிருப்பு இடத்தில் அதே ஏகாதிபத்தியம் செய்யும் அட்டூழியங்களை எதிர்க்கும் மனப்பான்மையுமே, அவர்களை — முஸ்லிம்களை — அவ்விதம் போராடும்படித் தட்டி எழுப்பிற்று என்பதை நாம் நன்கு உணர வேண்டும். முஸ்லிம் தேசபக்தர்களுக்கு முன் மேற்கண்ட இரண்டு நோக்கங்களே—இந்தியாவிலிருந்தும், தங்கள் சொந்த குடியிருப்பு பிரதேசத்திலிருந்தும் ஏகாதிபத்தியத்தை விரட்டவேண்டும் என்ற இரண்டு நோக்கங்களே—அன்று தோன்றிற்று.

இதுதான் உண்மை. தேசபக்தி. மஹாத்மா காந்தியும், மற்ற காங்கிரஸ் தலைவர்களும் இதை நன்கு உணர்ந்தனர். இதனுல்தான் கிலாபத் இயக்கத்தை காங்கிரஸுடைய சுயராஜ்ஜிய இயக்கத்தின் ஒரு பகுதியாக ஏற்றுக்கொண்டனர். ஹிந்து முஸ்லிம் ஐக்கியம் பிரவாகமெடுத்து ஓடிற்று.

### இயக்கத்தின் முடிவு

ஒத்துழையாமை இயக்கம் எவ்வளவோ தீவிரமாக நடந்தும், கடைசியாக வெற்றிபெறவில்லை. ஏனெனில் இயக்கத்தை நடத்திய தலைமைப் பதவி சில முக்கியமான விஷயங்களைச் செய்யத் தவறிவிட்டது. போராட்டத்தை எங்கு எந்தெந்த முறைகளைக் கையாண்டு எவ்விதம் நடத்த வேண்டும் என்று தெளிவான செயல் திட்டமொன்றை வரையறுக்கவில்லை. "சுயராஜ்யம்" என்ற பதம் பிரசங்கிகளுடைய மனோபாவத்திற்கு ஒப்பப் பலவிதங்களில் விளக்கப்பட்டது; சுதந்திர இந்தியாவில் எத்தகைய அரசாங்கம் இருக்கும்; எவ்விதம் நடக்கும்; இந்தியாவில் உள்ள பல்வேறு இனத்தினருக்கும் எத்தவிதமான இடம் கிடைக்கும் என்பன தெளிவாக வரையறுத்துக் கூறப்படவில்லை. தொழிலாளர்கள், விவசாயிகளுடைய ஜனநாயக உரிமைகளும், பல்வேறு தேசிய இனங்களின் சுயநிர்ணய உரிமையும் இந்திய சுதந்திரப் போராட்டத்தின் ஒரு பகுதி

(6-ம் பக்கம் பார்க்க)

## வத்திராயிருப்பு

# விவசாயிகள் சங்க ஆரம்பம்

**ஞா**யிற்றுக்கிழமை 23–1–44 மாலை 3-மணிக்கு வத்திராயிருப்பு விவசாயிகள் சங்கம் ஆரம்பிக்கப்பட்டு, சங்க நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தனர். அப்பொழுது கீழ்க்கண்ட இரு தீர்மானங்களையும் நிறைவேற்றியுள்ளனர்.

(1) விவசாயிகளுக்கும், மற்ற ஏழை மக்களுக்கும், போதிய உணவுப் பொருள்கள் கிடைப்பதற்கும், அதை சரியான முறையில் விநியோகிப்பதற்கும் உதவி செய்வது.

(2) உணவுப் பொருள் உற்பத்தி வருஷா வருஷம் குறைந்து கொண்டே வருவதால் விவசாயத்தை நல்ல முறையில் பயிர் செய்து, உணவுப்பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்கு விவசாயிகளிடையே பிரசாரம் செய்வதுடன், அவர்களின் குறைபாடுகளை நீக்கவும் உடனே நடவடிக்கை எடுத்துக்கொள்வது.

# உணவுப்பொருள் பெருக்க விவசாயிகள் முடிவு

**பா**வாலி ஜமீன் ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்தது. விருதுநகருக்கருகிலுள்ளது. இந்த ஜமீனில் 18 கிராமங்கள் அடங்கியிருக்கின்றன. இங்கு நஞ்சை நிலம் மிகவும் சொற்பம். பெரும்பான்மை புஞ்சை தான்யங்கள்தான் சாகுபடி செய்யப்படுகின்றன. மழை மிகக் குறைவு.

இந்த 18 கிராமங்களிலும் விவசாயிகள் சங்கத்திற்கு அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். மொத்த எண்ணிக்கை 583.

26–12–43 ந் தேதி மாலை நடந்த விவசாயிகள் சங்கக் கூட்டத்தில் 28 பேர்கொண்ட ஒரு நிர்வாகக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

அந்நிர்வாகக் கமிட்டியின் முதல் கூட்டம் 9–1–44 ந் தேதி நடைபெற்றது. அப்பொழுது கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

1. இந்த 18 கிராமங்களிலும் வசிக்கும் ஏழைஜனங்களுக்குப் போதிய உணவுப் பொருள்கள், பருத்தி விதை, புண்ணாக்கு முதலியன கிடைப்பது மிகவும் கஷ்டமாயிருக்கின்றது. ஆகலால் வள்ளியூரிலும், வடமலைக் குறிச்சியிலும் இரண்டு கோவாபரேடிவ் ஸ்டோர்களை ஏற்படுத்தவேண்டுமென்று சர்க்காருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

2. உணவுப்பொருள் விளைச்சலை அதிகரிப்பதின் மூலம்தான், நாட்டின் பஞ்சத்தைப் போக்கி, மக்களைக் காப்பாற்ற முடியும் என்று இக்கமிட்டி திடமான அபிப்ராயம் கொண்டுள்ளது. ஆதலால், இந்த ஜமீன் பிரதேசங்களில் பாயும் ஓடைகளின் கழிவு ஜலத்தை, ஓடைகளின் இரு பக்கங்களிலுமுள்ள நிலங்களுக்கு யாதொருவிதமான தண்ணீர் தீர்வையுமின்றி பாய்ச்சிக்கொள்வதற்கு உரிமை கொடுக்கும்படி ஜமீன் மானேஜரைக் கேட்டுக்கொள்கின்றது. அதன்மூலமே, அதிக விளைவில்லாத இந்த வரண்ட பிரதேசத்தில் அதிக உணவுப் பொருளைப் பயிரிட முடியும்.

3. பாவாலி ஜமீனிலுள்ள கண்மாய்களின் உள்வாய்களில், நிலமில்லாத ஏழை விவசாயிகளுக்கு சென்னை சர்க்கார் தற்போது அளித்துள்ள சலுகைகளின்படி—(கண்மாய்களில் தண்ணீர் இல்லாத காலங்களில்) யாதொரு விதமான வரியோ, தீர்வையோயின்றி உணவுப்பொருள் பயிரிட அனுமதி கொடுக்கவேண்டும்.

இத்தீர்மானங்களெல்லாம், உணவுப்பொருள் அதிகரிப்பில் விவசாயிகள் எவ்வளவு ஆர்வம் கொண்டுள்ளனர் என்பதையே நமக்குக் காண்பிக்கின்றது.

# கிராமப்புறங்களிலும் ரேஷனிங் உடனே தேவை

**ரா**மநாதபுரம் ஜில்லாவிலுள்ள ஆலமரத்துபட்டி, நாரணபுரம், செங்கமலப்பட்டி, ஆகிய கிராமங்களிலுள்ள நிலமில்லா விவசாயிகள், தங்கள் உணவுப் பஞ்சம் தொலைவதற்கு பலமுறை ஸ்தல அதிகாரிகளைப் பேட்டி கண்டனர். ஓரளவுக்குப் பலனும் கிடைத்தது.

16–1–44ல் தற்காலீகமாக ரேஷன் கார்டுகள் கொடுப்பதாக அதிகாரிகள் கூறினர்.

### ரேஷன்கார்டுக்கு லஞ்சம்!

இந்த ஜில்லாவில் மற்ற கிராமங்களில் அதிகாரிகள் ஏராளமாக லஞ்சம் வாங்குவதாகத் தெரிகின்றது: சில கிராமங்களில் ஒவ்வொரு விவசாயியிடமும் 8 அணு லஞ்சம் வாங்கிக்கொண்டு ரேஷன் கார்டுகள் கொடுத்திருக்கின்றனர். இந்தப் பழக்கம் நிறுத்தப்படவேண்டுமென்பதற்காக ஆலமரத்துப்பட்டி விவசாயிகள் கிராம முன்சீப்பிடம் சென்று முறையிட்டிருக்கின்றனர்.

அந்த கிராம முன்சீப் அதை ஒரு காதில் வாங்கி, மறுகாதில் வெளியே விட்டு, முணங்கிக்கொண்டே ரேஷன் கார்டுகள் கொடுத்தார்.

விவசாயிகள் எல்லோரும் ஒரு வாரந்தான் தான்யம்வாங்கினர். மறுவாரம் ஸ்டாக்கில்லை என ரெவின்யூ இன்ஸ்பெக்டர் கையை விரித்துவிட்டார். இதற்கு, இது பற்றாக்குறை பிரதேசமென்றும், மேற்கொண்டு தானியம் வந்து சேரவில்லை என்றும் கூறினர்.

அவரைச் சொல்லி என்னபயன்? அவர் என்ன செய்வார்? தேசம் பூராவுமே ஜனங்களின் நம்பிக்கை பெருத அதிகாரவர்க்கத்தின் நிர்வாகம் இவ்வாறு சந்தி சிரிக்கும்படியாகத்தானே யிருக்கிறது.

### கள்ள மார்க்கெட் விலைதான்!

இப்பிரதேசத்தில் காணம் என்ற தானியமும், உளுந்துந்தான் அதிகமாக விளைந்திருக்கின்றன. இவைகளுக்குக் கண்ட்ரோல் விலை காணம் ரூபாய்க்கு 4 படி; உளுந்து ரூபாய்க்கு 3 படி. ஆனால் தான்யம் கிடைப்பது கள்ளமார்க்கெட் விலையில்தான். அதாவது காணம் ரூபாய்க்கு 3 படி; உளுந்து படி 2

இக் கள்ள மார்க்கெட் வியாபாரத்தைத் தடுப்பதாக கிராம அதிகாரிகள் வாயளவில்சொல்லுகின்றனர். ஆனால், நடைமுறையில் ஒன்றும் இல்லை. லஞ்சம் இவ்விஷயத்திலும் ஏராளமாகத் தாண்டவமாடுகிறது.

நிற்க, சென்ற வருடத்தைக் காட்டிலும் இவ்வருடம் உற்பத்தி குறைந்திருக்கின்றது. ஆகையால் வருகின்ற ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் கொடுரமான முறையில் பஞ்சப்பேய் தாண்டவமாடுமெனத் தெரிகிறது.

ஆதலால், சர்க்கார் இவ்விஷயத்தை உடனே கவனித்தாகவேண்டும். நகரங்களில் ரேஷனிங் வந்தது மாத்திரம் போதாது. உடனடியாக எல்லா கிராமப் பிரதேசங்களிலும் உணவு ரேஷனிங்முறை உடனடியாகக் கொண்டுவரப்பட வேண்டும். இல்லாவிடில் வங்கத்தின் கிராமங்களில் ஏற்பட்ட நிலைமையே இங்குஏற்படலாம். நம் கிராமப்புறங்கள் பூராவும் சுடுகாடாக மாறும் ஆபத்து! காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்வதுதான் விவேகம்!

# தொண்டர்படை உணவுக் கமிட்டி

**தி**ருச்சி ஜில்லா தேவைக் கதிகமான தான்யங்களை உற்பத்தி செய்யும் (surplus) ஜில்லாக்களில் ஒன்று. இருந்தபோதிலும் நியாயமான விலைகளில் ஜனங்களுக்கு அரிசி கிடைப்பதில்லை. கண்ட்ரோல் விலை ரூபாய்க்கு $2\frac{1}{2}$ படி. ஆனால் நடைமுறையில் கள்ள மார்க்கெட் விலைகள்தான். ரூபாய்க்கு 2 படியும் ஒரு வீசம் படியும் கிடைக்கும்; இங்கு பங்கீடு முறை அமுலுக்குக் கொண்டுவரப் படுவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

* * *

இங்கு நாதர்ஷா தர்க்கா பிரதேசத்தில் உள்ள சுமார் 900 குடும்பங்களும் முஸ்லிம் குடும்பங்கள். பெரும்பாலும் பீடித் தொழிலாளிகள். அன்றாடம் கூலி சம்பாதித்து வாழ்க்கை நடத்தும் நிலைமையிலுள்ளவர்கள்.

இங்கு ரேஷனிங்கைப் பற்றிப் பேச 16–2–44-ந் தேதி ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. பீடித் தொழிலாளர் சங்கம். முஸ்லிம் வாலிபர் சங்கம் முதலியவைகளின் சார்பில். இங்குள்ள முஸ்லீம் மதத் தலைவர் காஜி ஸிராஜுதீன் தலைமை வகித்தார். கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பில் ஏ. எஸ். கிருஷ்ண மூர்த்தியும், காங்கிரஸ்காரர் ஜனுப் அப்துல் கையூமும், பங்கீட்டின் அவசியத்தைப் பற்றிப் பேசினர். கூட்டத்தின் ஆரம்பத்தில், வங்கப் பஞ்சத்தைப்பற்றி பீபிள்ஸ் வார் பத்திரிகையில் வந்திருந்த ஒரு பாட்டை உருது பாஷையில் முஸ்லீம் வாலிபர் சங்க அங்கத்தினர் ஒருவர் பாடி வங்கத்தின் கோர நிலைமையை விவரித்தார்.

கூட்ட முடிவில், பங்கீடுத் திட்டப்படி எல்லா ஜனங்களும் சௌகரியமாக அரிசி வாங்க உதவி செய்வதற்கு ஒரு தொண்டர் படை ஏற்படுத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது. இப்பொழுது அப்பிரதேசத்தில், பீடித்தொழிலாளிகளும், முஸ்லீம் வாலிபர் சங்க அங்கத்தினர்களும், ஜனசங்கிக் கணக்கெடுத்து வருகின்றனர்.

இப்பிரதேசத்திலுள்ள முஸ்லீம் காங்கிரஸ் வாதி ஒருவர் கம்யூனிஸ்டுக் கட்சியின் முயற்சிகளைப் பாராட்டிவிட்டு, அங்கு ஒரு ஐக்ய உணவுக் கமிட்டி ஏற்படுத்துவதற்கு ஒத்துக்கொண்டிருக்கிறார்.

# ஆவி போகுதே!



தோழர் பாட்லிவாலா

இந்தப் படங்களைப் பாருங்கள்! மயிர் கூச்சலெடுக்கிறது. நடக்கும் எலும்புக்கூடுகள்; கிடக்கும் எலும்புக் கூடுகள் எங்கும் எலும்புக் கூடு மயம்.

இது யுத்த களமா? இல்லை.

இது ஒரிஸ்ஸா; ஓயாது உழைக்கும் ஒரிஸ்ஸா; உழுது பயிரிடும் ஒரிஸ்ஸா; உணவு அளிக்கும் ஒரிஸ்ஸா.

முதல் படத்திலிருக்கும் பெண்ணைக் கேளுங்கள் "எங்கள் ஆம்பிளை எங்கிருக்கிறார் என்று தெரியாது!" ஒரு வேளை நான்காவது படத்தில் காணும் குவியலில் இருக்கலாம்! ஆனால் உருவமிழந்த எலும்புக் கூடுகளில் அடையாளம் பார்ப்பதெப்படி? இரண்டாவது படத்தில் கந்தலுடன் நிற்பது யார்! பேயல்ல, பெண். என்ன யோசித்துக்கொண்டிருக்கிறாள்! நீங்கள் மூன்றாவது படத்தில் பார்க்கிறீர்களே, அதுதான் நாளைக்கு அவள் கதி போலும்! அவள் பக்கத்தில் நிற்கும் சிறுமி யார்? அவள் பெற்றெடுத்த மகள். மகளைத் தெருவில் விட்டுச் செல்வாளா! சின்னஞ் சிறு சிசுவை வேசித் தொழிலுக்கு விற்பாளா! குள்ள நரிகள் விருந்துண்ண விடுவாளா? ஒன்றுமே சொல்ல முடியாது. படங்கள் மூன்று, நான்கு. அவை சுய விளக்கமாயிருக்கின்றன. சமூகம் சுடுகாடான காட்சி!

இவற்றை தோழர் பாட்லிவாலா கண்ணாரக் கண்டார். தோழர் சுனில் ஜானு படம் பிடித்தார். அவற்றை உங்களுக்கு அளித்திருக்கிறோம்.

நான்காம் படத்திலுள்ள எலும்புக் கூடுகளை எண்ணுங்கள்! எண்ணுவது லகுவல்ல, ஆனால் இது ஒரிஸ்ஸாவின் ஒரு மைதானம்; இன்னும் இதுபோல் எவ்வளவு மைதானங்கள்! கணக்கெடுத்தவர் எவர்!

முதல் இரண்டு படங்கள்; அதில் நடைப் பிணங்கள். இது ஒரிஸ்ஸாவில் விசேஷமான—விதிவிலக்கான—காட்சியல்ல; சர்வ சாதாரணமான காட்சி. நீங்கள் பார்க்கும் பெண்களைப்போல், சிறுவர், சிறுமிகளைப்போல் அங்கே எவ்வளவு பேர்! ஜனத்தொகையில் சுமார் மூன்றில் ஒரு பாகத்தின் நிலைமை இது. அவர்களையும் எதிர்பார்த்திருக்கின்றன நரிகளும், கழுகுகளும், அவற்றிற்கு ஒரே விருந்துதான்!

நான்கு படங்கள். கோரமான படங்கள். குலை நடுக்கும் படங்கள். ஒரிஸ்ஸாவின் படங்கள்.

இந்த ஒரிஸ்ஸாவில்தான் ஜப்பானியக் குள்ளன் சில தினங்களுக்கு முன்பு குண்டு வீசினான். ஆகாயத்தில் உலவும் கள்ள நரி!

நான்கு படத்தையும் இன்னுமொரு முறை பாருங்கள். இம்மக்களைப் பீடித்த விபத்து என்ன!

பஞ்சம்! சோற்றுப் பஞ்சம்!! மனிதன் ஆக்கிய பஞ்சம்!!!

எண்ணற்ற மக்களை எலும்புக் கூடுகளாக கேட்பார் முறையின்றி எறிந்தான்—ஆறு மாதத்தில். எண்ணி எண்ணி ஒரு கோடி ரூபாயை பத்திரமாக முடிந்தான்—ஆறு மாதத்தில். இவன் ஒரு உணவுத்திருடன். இந்தத் திருடர்கள்—எங்கும் போல்—ஒரிஸ்ஸாவில் மலிந்து விட்டனர். மனிதனின் உயிரும் மலிந்துவிட்டது. ஒரு மணி தான்யம் காணக்கிடையாத தங்கமாயிற்று!

இத்தருணத்தில் நாடு திருடி விமானத்தில் வந்து வெடி குண்டு வீசுகிறான்! அவன் வாக்களித்த "அரிசி மூட்டைகள்" ஆகாயத்திலிருந்து சாவை பரப்பிக்கொண்டு இறங்குகின்றன. பஞ்சத்தின் கோரத்தை பூர்த்திசெய்ய பறந்து வரும் பாவி ஜப்பான்!

* * *

நான்கு படத்தையும் நன்றாய்ப் பாருங்கள். மூடிவிடுங்கள். உங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள். உங்கள் தாய், மனைவி, சகோதரி, குழந்தைகள் அந்நிலைமையிலிருக்கின்றனர்--சற்று சிந்தித்துப் பாருங்கள். நம் நாட்டின் படங்கள்; நம் மக்களின் படங்கள். நமக்கு பாடம் கற்பிக்கும் படங்கள் இவை.

இன்று படங்களைப் பார்க்கிறீர்கள்; நாளை நேரில் உங்கள் ஊரில் காண்பீர்கள். என்ன! இந்த சமூக அழிவு; இந்திய சமூகத்தின் அழிவு. தடுக்க வேண்டும். நீங்கள் தடுக்க வேண்டும்; நான் தடுக்க வேண்டும். ஒவ்வொரு இந்தியனும் தடுக்க வேண்டும். இந்த அழிவை தடுத்தே ஆக வேண்டும். இல்லாவிடில் அனைவருக்கும் அழிவு.

அழிவில் இன்னும் அழிவு சேர்க்கும் அந்நிய அயோக்யனை—குள்ள ஜப்பானை—எதிர்க்கவேண்டும். படத்தில் பார்க்கும் இடங்கள் எதிரிக்கும் எட்டித்தொடும் தூரத்திலிருக்கின்றன. அதனால் அதற்கு முதல்ஆபத்து அதிக ஆபத்து; அக்காரணத்தால் நாட்டின் முன்னணி அது. அதுவே அதன் விசேஷ முக்யத்வம். முன்னணி போயின் பின்னணி யில்லை. ஒரிஸ்ஸாவை பலப்படுத்துவது, நம் பாதுகாப்பு. ஒரிஸ்ஸாவிற்கு உதவுவது எதிரியின் மீது எதிர்த் தாக்குதலுக்கு கைகொடுப்பது. எதிரியை ஒழிக்காமல் நாட்டிற்கு விமோசனமில்லை; விடுதலையில்லை. உடனே ஒரிஸ்ஸாவிற்கு உதவுவோம். ஒரிஸ்ஸாவின் உயிர் காப்போம். நம் உயிர் காத்தவராவோம்; விடுதலைக்கு வழி தேடியவராவோம்!



1



2



3



4

# "சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்கிறோம்"

## சென்னை மாணவர் தீர்மானம்

1942-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தை ஞாபகமூட்டிக் கொள்ளுங்கள். மாணவ உலகத்தில் நாடெங்கும் என்ன கொந்தளிப்பு! எங்கும் "தொடர்ச்சி வேலைநிறுத்தம்." அதிகாரவர்க்க அடக்குமுறை. பின்னர்? அரசியல் மனச்சோர்வு. இது நாம் கண்ட அனுபவம்.

இந்த விதிக்கு சென்னை விலக்கல்ல; ஆதலால் சென்னை மாணவர் சங்கத்தின் பொறுப்பு பன்மடங்காயிற்று. "போராட்டம்" காங்கிரஸால் ஆரம்பிக்கப்படவில்லை. அதிகாரவர்க்கத்தின் ஆத்திரமூட்டல். அதற்கு இரையாக வேண்டாம்" என்று படித்துப் படித்து மாணவர்களுக்கு விளக்கி வந்தனர். மனஞ் சோர்ந்த காலத்தில் "மனமொடிந்திருப்பதற்கு ஒன்றுமில்லை—வழியுண்டு, சுதந்திரமடைவோம்" என்று விடாது "ஒற்றுமை வழியை மாணவர்களுக்குக் காட்டி வந்தனர். அரசியல் வாழ்க்கையை மடியாது காத்து வளர்த்து வந்தனர்.

சாமான்யமான வேலையல்ல. அடாத அடக்குமுறை! ஆத்திரப் பெருக்கு!! அவதூறு பிரசாரம்!!! இதனிடையில் கொஞ்சமும் மாணவர்களின் தேசபக்தியில் நம்பிக்கை இழக்காமல், ஓய்வு ஒழிவின்றி உறுதியுடன் சேவை செய்தனர் சென்னை மாணவ சங்க ஊழியர்கள்.

### மகாநாடு

அதற்குப் பலன் கிடைத்தது. அதன் பலனே ஜனவரி 29, 30ம் தேதிகளில் நடந்தேறிய சென்னை மாணவ சங்க மூன்றாவது ஆண்டு மகாநாடு. சுமார் 2,000 அங்கத்தினர்களின் பிரதிநிதிகளாய் 160 மாணவ ஊழியர்கள் கூடிய மகாநாடு. சகோதர ஸ்தாபனங்களிலிருந்து 30 பிரதிநிதிகளைப் பெற்ற மகாநாடு.

சென்ற வருஷத்தில் சென்னை மாணவர் சங்கம் திரட்டிய ஒற்றுமையே இம்மகா நாடு; ஊட்டிய அரசியல் விழிப்பே இம்மகாநாடு; காத்த அரசியல் வாழ்க்கையே இம் மகாநாடு.

### அரசியல் அறிக்கை

இனி முன் நோக்குவோம்; இவ் வருஷ வேலை. இதற்கு வழிகாட்டியும் இம்மகாநாடு.

மகாநாட்டில் ஒரு அறிக்கை நிறைவேற்றப்பட்டது. அது மாணவர்களுக்கு நாட்டின் நிலைமையை ஆராய்

(6-ம் பக்கம் பார்க்க)

## குறைகள் போக்க
# கோலார் தொழிலாளர் தூதுகோஷ்டி

கோலார் தங்கவயல் தொழிலாளிகளின் நிலைமையைப் பற்றிப் பலதடவை ஜனசக்தியில் எழுதியுள்ளோம்.

அவர்களுக்கு, தங்கச்சுரங்க அதிகாரிகளாலேயே வேண்டிய எல்லாப் பொருள்களும் சப்ளை செய்யப் பட்டு வந்தன.

இங்குள்ள ரேஷன் முறைப்படி கொடுக்கப்படும் தான்யம் தொழிலாளிகளுக்கு மிகக் குறைவு. 15 நாட்களுக்கு 5½ சேர் புழுங்கலரிசிதான். ஆனால் பூராவும் புழுங்கலரிசியுமல்ல; பச்சரிசியும் கொஞ்சம்; ராகி, அரிசிக் குரணை, சோளம் முதலிய எல்லா தானியங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் — ஒரே அவியல்தான். இவ்வாறு கொடுக்கப்படும் தானியங்கள் 10, 11 நாட்களுக்குத்தான் வருகின்றது. 3 அல்லது 4 நாட்களுக்குப் பட்டினிதான்.

அளவுதான் இவ்வாறெனில் தான்யங்களாவது நல்ல ரகமாகக் கிடைக்கின்றதா? அதுவும் கிடையாது. நாற்றமெடுக்கும் அரிசி; சோளம், குதிரைகள் தீனிக்காக உற்பத்தி செய்யப்படும் சோளம் மாதிரி யிருக்கின்றது. இது தவிர, தானியங்களில் கல்லும், மண்ணும் கணக்கின்றி இருக்கும்!

இவ்வாறு கிடைக்கும் தான்யங்களின் விலையோ ஆனை விலை, குதிரை விலைதான். சொல்லத்தரமன்று.

ஆதலால் இக்குறைகளையெல்லாம் தூது கோஷ்டியாக, அதிகாரிகளிடஞ் சென்று தெரிவிப்பதென தொழிலாளர் சங்கங்களின் நிர்வாகிகள் முடிவு செய்தனர். 19-1-44-ந் தேதியன்று கோலார் ஜில்லாவின் டிபுடி கமிஷனரைப் பேட்டி கண்டனர்; 24-1-44-ந் தேதியன்று மைசூர் சமஸ்தான சிவில் சப்ளை டைரக்டரைப் பேட்டி கண்டனர்.

நந்திதுர்க் சுரங்கத் தொழிலாளர் சங்கத்தின் தலைவர் தோழர் A. ரத்ன சபாபதி, கோலார் எலெக்ட்ரிசிடி டிபார்ட்மெண்ட் தொழிலாளர் சங்கத் தலைவர் செல்வமணி, ஊர்காம் சுரங்கத் தொழிலாளர் சங்கத்தலைவர் டி. ராமச்சந்திரா, மைசூர் மைன்ஸ் லேபர் அசோஸியேஷன் தலைவர் V. M. கோவிந்தன், செங்கல் தொழிலாளர் சங்கத்தலைவர், டி. கே. ராமாநுஜலு, சேம்பியன் ரீப் சுரங்கத் தொழிலாளர் சார்பில் இன்னொரு தோழர், ஆகியவர்கள் தூதுகோஷ்டியில் சென்றிருந்தனர்.

### உறுதிமொழி

இவர்களின் குறைகளையெல்லாம் கேட்டு, பின்னர் கீழ்க்கண்ட மாதிரி மாறுதல்கள் செய்வதாக டைரக்டர் உறுதி யளித்திருக்கின்றார்.

1. பச்சரிசிக்கு பதிலாக பூராவும் புழுங்கலரிசியே சப்ளை செய்யப்படும். சோளம், குரணை அரிசி

(3-ம் பத்தி பார்க்க)

(5-ம் பத்தி தொடர்ச்சி)

முதலியவைகளும் நிறுத்தப்பட்டுவிடும்.

2. வருகின்ற அறுவடைக்குப் பின் ராகி இன்னும் அதிகமாகக் கொடுக்கப்படும்.

3. அரிசி, ராகி இவைகளின் விலைகளைக் குறைப்பதற்கு சர்க்கார் தீவிரமாக யோசனைசெய்து வருகின்றனர்.

4. தொழிலாளிகள் இஷ்டப்பட்டால் வருடம் பூராவுக்கும் நெல்லாகவே சப்ளை செய்யப்படும்.

5. 'பி' வகுப்பு ரேஷன் கார்டுள்ளவர்களுக்கு, சர்க்கரை அளவு சிறிது அதிகப்படுத்தப்படும்.

# அமைதிக்கு பங்கம் விளைவிப்பது யார்?

## தொழிலாளிகளா ?..........?

விக்ரமசிங்கபுரம்

அமைதியைப் பாதுகாக்கவென்று இங்கு ரிசர்வ் போலீஸ் வைக்கப்பட்டிருக்கிறது, இந்த ரிசர்வ் போலீஸைச் சேர்ந்த சில கான்ஸ்டேபிள்களே அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் முறையில் நடந்துவருவதாகத் தெரிகின்றது.

14—1—44-ந் தேதி மாலை 6½-மணிக்கு, பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த பாலு பிள்ளை என்பவர், விக்ரமசிங்கபுரத்தில், ரிசர்வ் போலீஸில் இருந்த ஒரு ஹெட்கான்ஸ்டேபிளால் தடிகொண்டு தாக்கப்பட்டாராம். போட்டிசங்கமாகிய S.R.V. நாயுடுசங்கத்தின் ஆட்களாலேயே பாலு பிள்ளை இவ்வாறு காட்டிக் கொடுக்கப்பட்டு தாக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

அன்று மாலையே, மேற்சொன்ன சம்பவம் நடந்த இடத்திற்கு சிறிது மேற்கே, கருப்புசாமி என்ற பஞ்சாலைத் தொழிலாளர் சங்க அனுதாபியை ஒரு கான்ஸ்டேபிள் லத்தியைக் கொண்டு அடித்தானென்று ஒரு ரிபோர்ட் கூறுகிறது.

அன்றிரவு 8-மணிக்கு அதே மெயின் ரோடில் ஒரு கடை வைத்திருக்கும் ஒரு ஜனசக்தி வாசகருக்கும் நல்ல அடி. இதுவும் நாயுடு சங்கத்தின் ஆட்கள் காட்டிக் கொடுத்து செய்யப்பட்ட செய்கையே என்று தெரிகிறது.

தோழர் தளவாய், நடராஜன் போன்ற சங்க முக்யஸ்தர்களையும் போலீஸ் நன்ருய் அடித்துள்ளதாகத் தெரிகிறது. தவிர சங்கக் கட்டிடத்திற்குள்ளும் நுழைந்து. அங்கிருந்த தோழர்களையும் போலீஸ் பலமாகத் தாக்கி யிருக்கிறார்களாம்.

விக்கிரமசிங்கபுரத்தில் "அமைதியைப் பாதுகாப்பதற்காக" மில் நிர்வாகத்தின் வேண்டுகோளின் மேல், ரிஸர்வ் போலீஸ் கொண்டு வரப்பட்டது. விக்கிரமசிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்திஞல் இதுவரை அமைதிக்கு பங்கம் விளைந்து விட்டதாகக் கூறுவதற்கு எவ்வித முகாந்திரமும் கிடையாது. பார்க்கப்போனால், போட்டிச் சங்கத்தைச் சேர்ந்த சில காலிகள்தான் தொடர்ச்சியாக, நம் சங்க ஊழியர்களைத் தாக்கி வந்திருக்கின்றனர். எப்படியாவது அமைதிக்கு பங்கம் விளைவித்து, நமது சங்கவேலைகளைச் செய்யவொட்டாமல் செய்வதற்காக அவர்கள் இந்த சூழ்ச்சியில் இறங்கி இருக்கின்றனர் என்பதை உணர்ந்த நம். தோழர்கள் ஆத்திரமடையாமலிருந்து வந்திருக்கின்றனர்.

இதுவரையில் அவ்வாறு நம் தோழர்களை பலமாகத் தாக்கிய குண்டர்கள் மீது நடவடிக்கை எடுக்கவில்லை. இந்த நிலைமையில், 'அமைதியைக் காக்க' வந்த ரிஸர்வ் போலீஸே, தோழர்களைத் தாக்கி வருகிறது என்ற ரிபோர்ட்டைப் படித்தவுடன் திடுக்கிட்டோம்.

இது உண்மையானல், மானேஜ்மெண்டாரும், மானேஜ்மெண்டின் கையாளாயிருக்கும் போட்டி சங்கமும் சேர்ந்து, நம் சங்கத்தைக் குலைக்கச் செய்துவந்த முயற்சிகளெல்லாம் தோற்றுப்போனவுடன், போலீஸும் அவர்களோடு சேர்ந்திருக்கிறது என்றுதான் நினைக்கவேண்டிவரும்.

ஆனல் ஒன்றுமட்டும் நிச்சயம். விழிப்படைந்துள்ள விக்கிரமசிங்கபுரத் தொழிலாளிகளை அடக்குமுறையைக் கொண்டு நசுக்கிவிட முடியாது.

போலீஸின் இந்த அதிக்ரமங்களை சர்க்கார் உடனே கவனிக்கவேண்டும்.

# போனஸில் கை வைக்காதே! சர்வீசுக்கேற்றபடி வேலை கொடு

அம்பாசமுத்திரம்

அம்பா சமுத்திரத்தில் 14-1-44ந் தேதி யன்று ஒரு பொதுக் கூட்டம். விக்ரமசிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் நடத்தப்பட்டது. சுமார் 1,000 தொழிலாளர்கள் வந்திருந்தனர்.

வருடா வருடம் தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் போனஸ் விஷயமாகவும், மில்லுக்குப் புது ஆட்களை வேலைக்கெடுப்பது பற்றியும் இரு தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

போனஸ் தீர்மானத்தின் சாராம்சம் :—

"சென்ற வருடத்திய லாபத்திலிருந்து கம்பெனி பங்குதாரர்களுக்கு எத்தனை சத விகிதம் டிவிடெண்டு கொடுக்கப் படுகிறதோ, அதே சத விகிதம் (தொழிலாளியின் அவ்வருட மொத்த வருமானத்தில்) போனஸ் கொடுக்கப்பட வேண்டும்.

அவரவர்களுடைய சென்ற வருட மொத்த வருமானத்தைக் கொண்டு போனஸ் கணக்கிடப்பட வேண்டுமென்னும்பொழுது, மொத்த வருமானம் என்பது கமிஷன்களை நீக்கிய வெறும் சம்பளம் மட்டும் அல்ல. சம்பளம், நைட் போனஸ், டிக்கட் கமிஷன் முதலிய எல்லாம் சேர்ந்ததுதான். போனஸைப் பிடித்து வைக்காமல் ரொக்கமாகவே கொடுத்துவிட வேண்டும்.

இப்பொழுது மில்லில் வேலை பார்க்கும் தொழிலாளிகள் தங்கள் பந்துக்களைப் புதிதாக மில்லில் வேலைக் கெடுத்துக் கொள்ளச் செய்ய வேண்டுமென்ருல், அவர்கள் நாயுடு சங்கத்திடம் அத்தாட்சி பெறவேண்டுமாம்! நாயுடு சங்கத்தாரோ அத்தொழிலாளிகளிடம் 1937-ம் வருடத்திலிருந்து இதுவரை 7 வருடத்திற்கு மொத்தமாக சந்தாப் பணம் செலுத்திஞல்தான் மில்லில் சேர்த்துக்கொள்ள சிபார்சு செய்வார்களாம்.

ஆதலால், தொழிலாளிகளைச் சுரண்டுவதற்கு மில் மேனேஜ்மெண்டும், நாயுடு சங்கத்தாரும் ஏதோ ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளார்கள் என்றே தோன்றுகிறது ஆதலால் இந்த முறை ஒழிய வேண்டும். அதிகம் சர்வீஸ் உள்ள தொழிலாளிகளையே வரிசைக்கிரமமாக வேலைக் கெடுத்துக்கொள்ள வேண்டும். இது தான் 2-வது தீர்மானம்.



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

யாகக்கொண்டு வரப்படவில்லை.

### பிளவு தோற்றம்

ஒரு போராட்டம் தோல்வியுற்றது என்ருல் அதன்பின் ஏற்படக்கூடியவற்றை நாம் அறிவோம்: ஒத்துழையாமை இயக்கம் தோல்வியுற்றதும் மனச் சோர்வும் பிளவும் தலை தூக்க முற்பட்டன. முற்போக்கான கக்ஷிகளிடையே பிளவு ஏற்பட்டது. காங்கிரஸுக்கும் முஸ்லிம் லீக்கிற்கும் இடையில் பிளவு விரிவடைய ஆரம்பித்தது. காங்கிரஸிற்குள்ளேயே பிளவு ஏற்பட்டது. ஸி. ஆர். தாஸ், பண்டித மோதிலால் நேரு முதலியவர்கள் தலைமையில் சுயராஜ்ஜியக் கட்சி தோன்றிற்று.

(தொடரும்)

# உற்பத்திப் பெருக்கில் தொழிலாளர் வெற்றி

விக்ரமசிங்கபுரம்

ஹார்வி மில்லில், ஈரிழைமுறுக்கு நூல் தேவையில்லாத காரணத்தால் பல டப்ளிங் மிஷின்களை வேலையின்றி சும்மா விட்டு வைத்திருந்தனர்.

இந்த மெஷின்களையே சில ஸ்பேர் பார்ட்ஸ்களை மாற்றுவதன் மூலம் ஸ்பின்னிங்குக்கு உபயோகப் படுத்தலாம்; அதன் மூலம் நூல் உற்பத்தியை அதிகப்படுத்தலாம் என்று பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில், மில் மானேஜ்மெண்டுக்கும், லேபர் கமிஷனருக்கும் எழுதியிருந்தனர். வெளியிலும் கூட்டங்கள் மூலம் கிளர்ச்சிசெய்துவந்தனர்.

இப்பொழுது அதற்குப் பலன் கிடைத்துள்ளது. ஈரிழை தேவையில்லாமல் நின்றுவிட்ட மெஷின்களை சில ஸ்பேர் பார்ட்ஸை மாற்றி ஸ்பின்னிங்குக்கு உபயோகிக்க ஆரம்பித்திருக்கின்றனர். இவ்விதம் இப்பொழுது 3 டப்ளிங் மெஷின்கள் ஸ்பின்னிங்குக்கு உபயோகப் படுத்தப்பட்டிருக்கின்றன.

இவைகள் சராசரி 360 ஸ்பிண்டில்கள் கொண்டவை. ஒரு நாள் முழுவதும் ஓடுவதன் மூலம் 3 மெஷின்களும் சுமார் 1,000 பவுண்டு நூல் நூற்கின்றன.

பஞ்சாலைத் தொழிலாளர்சங்கத்தின் உற்பத்திப் பெருக்குக்கொள்கையில்கிடைத்த ஒருவெற்றியேஇது.

# பொன்மலைத் தொழிலாளர் வெற்றி

ரயில்வேத் தொழிலாளிகள் கிரேட்-டு-கிரேட் முறைப்படி சம்பள உயர்வு, பிரமோஷன் பெறுவதற்கு இதுவரை தடையிருந்துவந்தது. இத்தடையை எதிர்த்துப் பொன்மலை தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம் நீண்டகாலமாகக் கிளர்ச்சி செய்து வந்துள்ளது.

இப்பொழுது இப்பிரச்னையில் ஓரளவு வெற்றி கிடைத்துள்ளது.

1924ம் வருஷத்திற்கு முன்பு வேலைக்கமர்ந்தவர்களுக்கு ரூ. 1-6-0 வரையிலும், 1924க்குப்பின் 1931க்கு முன் வேலைக்கமர்ந்தவர்களுக்கு ரூ. 1-4-0 வரையிலும், 1931க்குப் பின் வேலைக்கமர்ந்தவர்களுக்கு ரூ. 1-2-0 வரையிலும் வருஷா வருஷம் சம்பள உயர்வு பெற முடியுமென்று ரயில்வே ஏஜண்டு கடித மூலம் சங்கத்திற்குத் தெரிவித்துள்ளார்.

1944 ஜனவரியிலிருந்து இது அமுலுக்கு வரும்.

(5-ம் பக்கம் தொடர்ச்சி)

கிறது; கொள்கையை நிர்ணயிக்கிறது; வேலைத்திட்டம் வகுக்கிறது.

இன்று இந்திய சமூகத்திற்கே சீர்குலைவு ஏற்படும் என்ற ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. அதன் ஆரம்பம் வங்கத்தின் கொடிய பஞ்சம். இந்திய ஜனங்களின் தலைவர்கள் வெளியில் இல்லை. உள்ளிருந்துகொண்டே காந்திஜி காட்டும் வழி. பஞ்சம்போக்கும் வழி. ஸ்ரீமதி சரோஜினி தேவியும் அதே சேவைக்குத்தான் அறைகூவல் கொடுத்துள்ளார். அது தேசபக்திப் பாதை.

பஞ்சத்திற்குக் காரணம் பொறுப்பற்ற அதிகார வர்க்கம்; வங்க அரசியல் கட்சிகளின் ஒற்றுமையின்மை. இதனல் கொழுக்கும் உணவுத் திருடர்கள்

வங்கம் அழிந்தால் இந்தியாவிற்கே அழிவு. ஆதலால் சர்வஜன ஒற்றுமை ஸ்தாபிப்போம். இது அறிக்கையின் சாராம்சம்.

### சுய நிர்ணய உரிமை

இந்த அறிக்கையில் குறிப்பிட வேண்டிய முன்னேற்ற மொன்றிருக்கிறது. அகில இந்திய மாணவ சம்மேளனம் இன்னும் தேசிய இனங்களுக்குச் சுயநிர்ணய உரிமை அங்கீகாரம் என்று தீர்மானம் நிறைவேற்றவில்லை. ஆனல் பஞ்சாப், ஆந்திர மாகாணங்களில் மாணவர் சங்கம் அவ்வுரிமையை அங்கீகரித்து தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கிறது. மூன்ருவதாக சென்னை மாணவர் சங்கம் அந்த ஜனநாயக உரிமைமை ஏற்றுக்கொண்டு ஒரு அடி முன் வைத்தது. வங்கம் காக்க, நாடு விமோசனம் பெற, ஒற்றுமையை ஸ்தாபிக்க தேசிய இனங்களின் பிறப்புரிமையான சுயநிர்ணய உரிமையை ஒப்புக்கொள்கிறது. முஸ்லிம் தேசிய இனங்களுக்கு இந்த உரிமை வழங்கி ஒன்றுபடுவோம் என்று இம்மகாநாடு ஒலித்தது. சுதந்திரப் படைகளின் முன்னணி—மாணவர்—முரசு கொட்டுகின்றனர்; முன்னேறுகின்றனர். அவ்வழியில் அனைவரும் அணிவகுப்போம்.

# தொழிற்சங்கக் கூட்டங்களுக்கு போலீஸ் தலையீடு!

மேட்டூர்

லெனின் தினம் வந்தது. பொதுக் கூட்டம் நடத்துவதற்காக ஸ்தலக் கம்யூனிஸ்டுக் கட்சித்தோழர்கள் சப்-மாஜிஸ்ட்ரேட்டிடம் அநுமதி கோரினர். ஏனெனில் சென்ற 9 மாத காலமாக இங்கே இந்தியப் பாதுகாப்புச் சட்டம் 56 (1) பிரிவு அமுலில் இருந்து வருகிறது. கூட்டத்திற்கு அனுமதி கிடைக்கவில்லை. அதற்குப் பதிலாக இ. பி. கோ. 144வது பிரிவுப் பிரகாரம் ஒரு மாதத்திற்குப் பொதுக்கூட்டம் நடத்தக் கூடாதென்ற தடையுத்தரவு தான் கிடைத்தது.

விஷயம் இத்துடன் முடிந்துவிடவில்லை 23-1-44ந்தேதி மேட்டூர் மில் தொழிலாளர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நடந்துகொண்டிருந்தது. திடீரென்று ஒரு போலீஸ் ஹெட் கான்ஸ்டேபிள் உள்ளே நுழைந்தார். நடவடிக்கைகளை கவனிக்கவேண்டு மென்ருர். "இது பொதுக்கூட்ட மல்லவென்றும் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்ட' மென்றும் வற்புறுத்தி எடுத்துச் சொல்லப்பட்டதின்பேரில் வெளியேறினர்.

24-1-44 மாலை; தொழிலாளிகளின் கதவடைப்புக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அதற்கு வந்து நடவடிக்கைகளை கவனிக்கவேண்டுமென்று போலீஸார் பிடிவாதஞ் செய்தனர்.

26-1-44 சுதந்திர தின கதவடைப்புக் கூட்டம். அதற்கும் வந்து கவனிக்கவேண்டுமென்று போலீஸார் பிடிவாதஞ் செய்தனர். கடைசியில் ஒரு லாரியில் ரிஸர்வ் போலீசுடன் வந்து சேர்ந்தார் ஸ்தல சப் இன்ஸ்பெக்டர்! சங்கத்தில் நடக்கும் எந்தக் கூட்டமாயினும் போலீஸார் கண்டிப்பாக அனுமதிக்கப்படவேண்டுமென்றும், "சந்தேகமிருந்தால் கட்டிடத்தைத் தகர்த்தெறிந்து உள்ளே நுழைவோம்" என்றும் அதட்டிப் பேசினாராம்.

குழப்பம் ஏற்படாமல் தடுக்க வேண்டுமென்ற நோக்கமே சங்கத் தோழர்களுக்குப் பிரதானமாயிருந்தது. ஜனங்களுக்கும், போலீஸாருக்கும் மோதல் ஏற்படக்கூடாது; அமைதியைப் பாதுகாக்கவேண்டும் என்ற காரணத்திற்காக கூட்டத்தில் போலீஸார் இருப்பதற்குக் கடைசியில் தோழர்கள் ஒத்துக்கொண்டனர்.

இம்மாதிரி யெல்லாம் போலீஸ் இடையூறுகள் ஏற்பட்டதென நமக்கு மேட்டூரிலிருந்து செய்தி வந்துள்ளது. இது உண்மையாயிருக்குமானல், இதை சர்க்கார் உடனே கவனிக்கவேண்டும். இம்மாதிரி ஏற்படாமல் தடுக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும்.

# 5 லக்ஷ நிதி வசூலுக்குக் கலை நிகழ்ச்சிகள்

கோவைக்கருகிலுள்ளது செல்வபுரம். இங்கு "செல்வபுரம் நாணய சபை" என்ற ஒரு வாலிபர் சங்கமிருக்கின்றது. இதன் அங்கத்தினர்கள் கூட்டம் ஒன்று 15-1-44 ல் கூடிற்று. 16-1-44 ல் நடக்கவிருந்த தைமாதத் திருவிழாவிற்கு 'கம்யூனிஸ்டுக் கட்சி கண்காட்சி சாலை, கம்யூனிஸ்டு பாடல் நிகழ்ச்சி, கோலாட்டம்—ஆகிய கலை நிகழ்ச்சிகளை நடத்தி 5லட்சநிதிக்குப் பணம் வசூலிக்கத் திட்டமிட்டனர்.

16-1-44. மாகாளியம்மன் கோவில் மைதானத்தில் மாலை 3 மணிக்கு கண்காட்சிச் சாலை அலங்கரிக்கப்பட்டது. அதில் உலகக் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் படங்களும், இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் படங்களும் வைத்து சித்தரிக்கப் பட்டன.

சமீபத்தில்தான் இங்கு கொடிய ப்ளேக் நோய் தாண்டவமாடிற்று. காலராவும் கூடத்தான். ஊர் முழுவதும் கலைந்திருந்தது. இப்போதுதான் நோய்களின் உக்ரம் தணிந்து, ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் திரும்பி வந்துகொண்டிருந்தனர். இந்நிலையில் மேற்சொன்ன கலைநிகழ்ச்சிகளுக்கு இச்சிறுஊரில் 600 பேருக்குமேல்வந்திருந்தது வியக்கத்தக்கது.

ஆரம்பம்: கம்யூனிஸ்டு பாடல்கள் பாடப்பட்டன. பின் தோழர்கள் M. கருப்புசாமி, S. கிருஷ்ணன் முதலியோர் தற்கால அரசியல், பொருளாதார நெருக்கடிகளைப்பற்றிப் பேசினர். அதைத் தீர்க்கக் கம்யூனிஸ்டுக் கட்சி செய்துவரும் வேலைகளை எடுத்துரைத்தனர்.

பின்னர் மறுபடியும் பாடல்கள்; கும்மி, கோலாட்டம் முதலியன நடைபெற்றன. கூட்டத்தில் சுமார் 320 பெண்களும் கலந்துகொண்டது பாராட்டத் தகுந்தது. இவ்வளவு பெண்களைத் திரட்டினதும்,கலை நிகழ்ச்சிகள் வெற்றிகரமாக நடைபெறவும் பொன்னம்மாள் என்ற பெண் தோழர் தீவிரமாகப் பாடுபட்டார்.

கூட்டத்தில் வசூலான ரூபாய் 4 கம்யூனிஸ்டு கட்சியின் 5 லட்ச நிதிக்குக் கொடுக்கப்பட்டது.

ஏற்கனவே இச்செல்வபுரம் நாணய சபையார் சங்கத்தின் மூலம் ஒரு தீர்மானம் நிறைவேற்றி 5 லட்ச நிதிக்கு ரூ. 5 அனுப்பிருக்கின்றனர்.

இவ்வூரில் ஜனங்களுக்குள் பல கட்சிப் பிளவுகள் இருந்தன. அப்பிளவுகளைப் போக்கி ஜனங்களை ஒற்றுமைப்படுத்த இந்தக் கலைநிகழ்ச்சிகள் ஓரளவுக்கு உபயோகமாயிருந்தன என்று நிச்சயமாகச்சொல்ல முடியும்.

## 5 லட்ச நிதிக்கு

### இந்திய சிப்பாயின் நன்கொடை!

சேலத்தில் ஒரு இந்திய சிப்பாயிக்கு பிரிவுபசாரம் நடந்தது. அப்பொழுது கம்யூனிஸ்டுக் கட்சித் தோழர் ராமதாஸ் "இன்றைய யுத்தத்தில் சிப்பாய்கள் கூலிக்காகப் போராடுபவர்களல்ல; ஆனல் உலக மக்களின் விடுதலைக்காக, பாசிஸத்தின் அழிவுக்காகப் போராடுபவர்கள் ஆதலால் ஜனங்கள், போராடும் சோல்ஜர்களுக்குப் பூரண ஆதரவு கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிருர்கள்" என்று பேசினர்.

அந்த சிப்பாய் கம்யூனிஸ்டுக் கட்சியின் 5 லட்ச நிதிக்காக ரூபாய் 5 கொடுத்தார். அத்துடன் நிற்கவில்லை மாதா மாதம் இம்மாதிரியே கொடுத்துதவுவதாகவும் உறுதி கூறினர்.

காவேரிப்பட்டணத்தில் தோழர் தெய்வசிகாமணி கிசான் சபை ஊழியர். அவருடைய தமக்கை வேதாம்பாள், கம்யூனிஸ்டுக் கட்சியைப்பற்றியும், அதனுடைய 5 லட்ச நிதியைப்பற்றியும் கேள்விப்பட்டார். ஜனங்களுக்காகச் சேவை செய்யும் கம்யூனிஸ்டுக் கட்சியின் நிதிக்கு உதவுவது தனது தேசபக்திக் கடமை என்றுணர்ந்து, தங்கத்தால் செய்யப்பட்டிருந்த தன்னுடைய தாலியை நன்கொடையாக அளித்துள்ளார்.

சேலம், தோழர் செல்வராஜின் தாயார் தன்னுடைய தங்க மூக்குத்தியை 5 லட்ச நிதிக்களித்துள்ளார். கொடுக்கும்பொழுது கட்சிக்காகக் கொடுப்பதற்குத் தன்னிடம் இன்னும் அதிக பொருளில்லையே என்று வருந்தினர்.

தென் இந்திய ரயில்வே தொழிற் சங்கத்தின் திருவாரூர் கிளையிலிருந்து 5 லட்ச நிதிக்காக ரூபாய் 10 வந்துள்ளது.

### ஜனசக்திக்கு நன்கொடை

ரூ. 30 பொருமானமுள்ள காமிரா

திருச்சி தோழர் K. P. S. கோன், சுமார் ரூ. 30 பொருமானமுள்ள காமிரா (புகைப் படம் எடுக்கும்) கருவியை நன்கொடையாகக்கொடுத்துள்ளார்.

யுத்தச் செய்திகள் ★ கே. பாலதண்டாயுதம்

# ★ செஞ்சேனையின் வெற்றிப் பிரவாகம்!
# ★ மார்ஷல் தீவுகளில் ஜப்பானுக்கு படுதோல்வி!
# ★ திருப்தி மனப்பான்மை வேண்டாம்: அபாயம் நீங்கவில்லை!

நிகோபோலை இந்தவாரம் செஞ்சேனை பிடித்துவிட்டது. இந்நகரம் நீபர்நதி வளைவில் தென்கோடியிலிருக்கிறது. மாங்கனீஸ் சுரங்கங்கள் நிறைந்த இடம். இதை நாஜிகள் பெரிய கோட்டையாகக் கட்டியிருந்தனர். நிகோபோலை தளமாகக் கொண்டு நீபர் வளைவிலுள்ள நாஜி ராணுவத்தை முழுவதையும் திணர வைக்க முடியும். அதேசமயத்தில் நிகொபோலுக்கு வடக்கே கிரிவாய்ராக் என்ற ஊரை நோக்கி செஞ்சேனை வந்து கொண்டிருக்கிறது; இந்த ஊர் இரும்புச் சுரங்கங்கள் மலிந்த இடம். கிரிவாய்ராக்கிற்கும் வந்துகொண்டிருக்கும் செம்படைகளும், நிகொபோலை எடுத்துள்ள செம்படைகளும் சந்தித்தால் சுமார் 2 லட்சம் நாஜிகள் சுற்றி வளைக்கப்படுவார்கள். பக் நதியிலிருந்து நீபர் வரை நாஜிகள் அரண் குலைந்துவிட்டது. பெஸரேபியாவிற்குள் ஓடினால் தான் உண்டு. அம்மாகிரி வாபஸ் ஆகலாம் என்று வதந்திகள் எழத் தொடங்கிவிட்டன.

## லூகா வெற்றி

லெனின்கிராடு முனையில் முக்கிய ரயில்வேஜங்ஷன், லூகாவை செஞ்சேனை பிடித்துவிட்டது. லெனின்கிராடு, ப்ஸ்காவ், வில்னு ரயில்வேயும், நொவகிராடிலிருந்து வரும் ரயில்வேயும் சேரும் இடம். ப்ஸ்காவிற்குப் போகும் பெரிய பாதையையும் இது கட்டுப்படுத்துகிறது. லூகாவைக் கைப்பற்றியது லெனின்கிராடு முனையிலுள்ள நாஜிகளுக்கு அசாத்யமான ஆபத்தை ஏற்படுத்தியிருக்கிறது. தப்பிப் போக வழியுண்டா என்பதே சந்தேகம்.

பின்லாந்தின் தலை நகரமாகிய ஹெல்சிங்கியில் சோவியத் விமானப் படை பெருந் தாக்குதல் நடத்திற்று. பின்லந்து தாங்கமுடியாத தாக்குதல். "போதும் போதும்" என்று யுத்தத்தை விட்டு ஒழுங்காக வெளிவருவதற்கு இத்தாக்குதல் ஆரம்பவேலைகளை செய்து வைத்திருக்கிறது.

நாஜிகளும், அவர்கள் சகாக்களும் நல்ல பூசை வாங்கி வருகின்றனர்; முனை பூராவும் அவர்கள் அணி முறிந்து வருகிறது; அவர்கள் தோல்வி என்பது நிச்சயம்! அதில் எவருக்கும் எள்ளளவும் சந்தேகமில்லை; ஹிட்லர் உள்பட எப்பொழுது என்பதே இனி உள்ள கேள்வி!

## ஜப்பானுக்கு பலத்த இடி

அமெரிக்கத் துருப்புகள் கிழக்கு பஸிபிக் பிரதேசத்தில் முன்னேறுகின்றன; மார்ஷல் தீவுக் கூட்டத்தில் மூன்று பெரிய தீவுகள் அமெரிக்கர் வசமாயிருக்கிறது. ஜப்பானியர்கள் 30 வருஷமாக பாதுகாப்புக் கோட்டைகள் கட்டின தீவுகள் அமெரிக்கருக்கு சரணாயிருக்கிறது. நியூ பிரிட்டனிலுள்ள ரபால் என்ற துறைமுகத்தை அமெரிக்க விமானங்கள் பலமாகத் தாக்கியிருக்கின்றன. நியூ பிரிட்டனுக்கும் மார்ஷல் தீவுக் கூட்டத்திற்கும் மத்தியி லிருப்பது கெரோலின் தீவுகள். இந்தக்கெரோலின் தீவில் ட்ரக் ஜப்பானியர்களின் பலத்த கோட்டை. இம்மூன்று தீவுகளும்—அதாவது நியூ பிரிட்டன், கெரோலின், மார்ஷல் தீவுக் கூட்டங்கள்—கிழக்குப் பஸிபிக்கில் ஜப்பானியரின் வெளிக்கோட்டை. மார்ஷல் தீவுகளை பிடித்து, ரபாலைத் தாக்கி வருவது கெரோலின் தீவின் நிலைமையை வெகு சங்கடத்திற்குக் கொண்டு வருகிறது. ஜப்பானியர்களின் சூரத்தனம் அமெரிக்கக் கப்பல் படையின் முன் மண் தின்கிறது.

ஜப்பானியத் தீவுகளின் வடகோடியில் குரைல் தீவுகளிருக்கின்றன. ஜப்பானுக்கு அடுத்த வீடுமாதிரி! அதன்மீது அமெரிக்க பீரங்கிப் பிரயோகம் நடந்தது. யுத்தம் அவர்கள் வீட்டுக்கே கொண்டு செல்லப்படுகிறது.

இங்ஙனம் அச்சுநாட்டு மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி! பெரிய தவிப்பு!!

திணறும் இக்கட்டத்தில் இந்திய முனை பலஹீனமாயிருப்பதை அச்சு நாடுகள் பார்க்கின்றன.

## குள்ளனின் குண்டுவீச்சு

பர்மாவிற்குள் எதிர்த்தாக்குதல் ஒன்றும் பிரமாதமாக நடத்தப்படாததைப் பார்க்கின்றனர். ஓட்டை கண்ட இடத்தில்நுழையப்பார்க்கின்றனர். உயிர் தப்புவதே பெரும் பிரச்னையாயிருக்கும்பொழுது பதட்டத்திற்கு சொல்லவும் வேண்டுமா! இலங்கைக் கடற் கரையோரத்தில் வெடிகுண்டு வீச்சு; விசாகப்பட்டணத்தில் ஜப்பானியக் குண்டுகள் எறியப்பட்டன. ஒரிஸ்ஸா கரையோரமாக விரோதி விமானம். இந்நடவடிக்கைகள் பிழைக்க வழியுண்டா என்று பித்துப் பிடித்தாடும் பாஸிஸ்டுகளின் நிலைமையைக் குறிக்கின்றன. அரக்கான் முனையிலும் ஜப்பானியர்கள் பல பக்கங்களிலிருந்து—திடும் பிரவேசமாய்—தாக்குதல் ஆரம்பித்திருப்பதாகச் செய்தி வருகிறது.

## ஆபத்து நீங்கவில்லை

ஜப்பானிய ஆபத்து இருக்கிறது; நீங்கி விடவில்லை. மற்ற முனைகளில் மண்ணைக் கவ்வக் கவ்வ அவர்களுடைய ஆத்திரங்கொண்ட, பீதி பிடித்தத் தாக்குதல் இங்கு அதிகரிக்கிறது. ஏமாந்த இடத்தில் கிடைத்தது லாபமென்று உயிர்கொஞ்சம் தாளாதாவென்ற ஏக்கத்துடன் பாய்கின்றனர். இதை நம் கவனத்தில் இருத்த வேண்டும். ஏனெனில் திருப்தி மனப்பான்மை என்பது தேசத்தின் அழிவு. திருப்தி மனப்பான்மை வருவதும், திடீரென்று கிலி பிடிப்பதும் அதிகாரவர்க்கத்திற்கு சகஜமாக இருந்து வந்திருக்கிறது. இன்று அதிகாரவர்க்கம் இந்தியப் பாதுகாப்பைப் பற்றி "ஆபத்து நீங்கிவிட்டது; விமோசனம் வந்தது: காலை நீட்டித் தூங்குங்கள்" என்ற தோரணையில் கிளம்புகிறது. அதனால் அரக்கான் முனையில் ஏற்பட்டுவரும் நிலைமையையும் இந்தியாவின்மீது நடந்து வரும் விமானத் தாக்குதல்களையும் இவ்வளவு விசேஷமாக—அடியில் கோடிட்டு—உங்களுக்குக் குறிப்பிடுகிறோம். வீட்டில் வெடிகுண்டு விழுந்து கொண்டு இருக்கிறது; இச்சமயத்திலும் "நமக்கும் யுத்தத்திற்கும் என்ன சம்பந்தம்" காட்டின் அழிவும், நாட்டின் விடுதலையும் ஜப்பானிய பாஸிஸத்தை எதிர்ப்பதைப் பொறுத்தது. இதில் செய்யும் தவறு நாட்டைப் பூராவும்—சந்ததிகள் பின் சந்ததிகளை—அடியோடு பாதிக்கும் என்பதை எச்சரிக்காமல் முடியாது.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

"டைம்ஸ் ஆப் இந்தியா" யுத்த நிருபர் இத்தாலியில் இருந்து இந்த மஹா நாட்டைக் குறித்து ரிப்போர்ட் செய்யும்போது, "மார்ஷல் ஸ்டாலினுடைய பெயரைக் கூறியதுதான் தாமதம், உடனே கூரையையே பிய்த்துக்கொண்டு போகும்படி மக்கள் கரகோஷம் செய்தனர்" என்று கூறுகிறார்.

## எதைக் காட்டுகிறது?

இத்தாலியின் அட்வைசரி கவுன்சிலில் இருந்துகொண்டு, இத்தாலிய மக்களின் ஜனநாயக உரிமைகளை ஆதரித்து, அவற்றை நிறைவேற்ற பிற்போக்குக் கும்பலை நிர்ப்பந்திக்கும் சோவியத் யூனியனுக்கு—பொது ஜன உரிமைகளுக்காக ஒவ்வொரு இடத்திலும் போராடும் சோவியத் யூனியனுக்கு—இத்தாலிய மக்கள் அளித்த கரகோஷம் எதைக் காட்டுகிறது! ஒவ்வொரு பிற்போக்கு சக்தியையும், ஏகாதிபத்தியங்களையும் தோற்கடித்து உலகமக்களுக்கு தலைமை வகித்து, சுதந்திர லக்ஷியத்தை நோக்கி, அவர்களை சோவியத் யூனியன் நடத்திச் செல்லுகிறது என்பதை இனியும் மறுக்க முடியுமா!

## தீர்மானங்கள்

இந்த மஹாநாட்டில் என்ன தீர்மானிக்கப்பட்டது தெரியுமா? (1) "மன்னர் விக்டர் எமானுவல் முடிதுறக்க வேண்டும். அவர்தான் முசோலினியை அதிகாரத்திற்குக் கொண்டு வந்து மக்களை சொல்லொணாத் துயரத்திற்கு உள்ளாக்கியவர்". (2) படோக்ளியோ நிர்வாகத்தில் இருக்கும் எல்லா பாசிஸ்ட்களும் ஒழிக்கப்படவேண்டும்; சர்வகட்சிகளடங்கிய ஜனநாயக பொதுஜன சர்க்கார் அமைக்க வேண்டும்". இந்த இரண்டு கோரிக்கைகளும் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

நேசநாட்டுப் படைகள் ரோம் நகரை நோக்கி முன்னேறிக்கொண்டிருக்கின்றன. ரோம் பிடிபட்டதும் பாசிஸம் நிர்மூலமாக்கப்படும்; பெரிய அரசியல் நிகழ்ச்சிகள் நடக்கும். அதற்கு மணியோசையைப் போல், பாரி மஹாநாடு கூடியிருக்கிறது. பாசிஸ்ட், ஏகாதிபத்திய பிற்போக்குக் கும்பல்களின் சதியை சோவியத் யூனியனின் பக்கபலத்துடன் முறியடித்து இத்தாலிய மக்கள் சுதந்திர மாளிகையில் நுழைவர் என்பதில் சந்தேகமில்லை.

## அ. இ. கிசான் சபா மகாநாடு

மார்ச் 14, 15 தேதிகளில் பெஜவாடாவில் நடைபெறும்.

ஸ்வாமி ஸகஜானந்த சரஸ்வதி, பங்கிம் முகர்ஜி, பாபா சோஹன்சிங் பாக்னு முதலிய கிசான் தலைவர்கள் விஜயம் செய்வர்.

தமிழ்நாடு கிசான் சபா மகாநாடு மார்ச் 19ந் தேதியன்று மன்னார்குடியில் நடைபெறும்.

**தோழர் பங்கிம் முகர்ஜி**
(வங்காளம்)
தலைமைவகிப்பார்

**தோழர் கேரளீயன்**
(கேரளா)
திறப்புவிழா நடத்துவார்

B. சீனிவாச ராவ்,
காரியதரிசி.
தமிழ்நாடு கிசான்சபா ஆர்கனைசிங் கமிட்டி, சென்னை.

## புது சகாப்தம்

ஏகாதிபத்தியங்களின் கொள்கையின் விளைவாக, கடந்த 25 வருஷங்களில் உலக மக்களும், ஐரோப்பிய மக்களும் பட்ட அவதி சொல்லத்தரமன்று. கடந்த 4 வருஷங்களாக ஹிட்லரின் காலடிகளில் கிடந்து அவர்கள் படும்பாட்டை யார்தான் வர்ணிக்க முடியும்! இவ்வளவு அநுபவங்களுக்குப் பிறகு சோவியத் சக்தியின் உதவியைக்கொண்டு, ஹிட்லரிஸத்தை முறியடித்த பிறகு, இந்த ஐரோப்பிய நாட்டு மக்கள், சோவியத் குடியரசுகளோடு சேர்வதை யார்தான் தடுக்க முடியும்? அவ்வாறு சேர்வதற்கு எந்த விதமான அவநம்பிக்கையும், மூட சூத்திரமும் குறுக்கே நிற்க முடியாதல்லவா!

ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட மக்களின் ராஜ்யங்களைக் கொண்ட ஒரு புதுக் குடும்பம் ஐரோப்பாவில் உதயமாவதற்கு இது அஸ்திவாரம்.

சுதந்திர தேசீய இனங்களைக் கொண்ட, சகோதர பாவத்துடன் வாழும் புதிய உலக சமுதாயத்திற்கு இதன் மூலம் சோவியத் யூனியன் வழி காட்டுகிறது.

நம் நாட்டிலுள்ள தேசீய இனங்களுக்கு சம அந்தஸ்தையும் சுயநிர்ணய உரிமையையும் அளிப்பதன் மூலம், இன்றைக்குள்ளபூசல்களும், அவநம்பிக்கையும் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்துவிடும்.

மக்களிடையே நம்பிக்கை வைத்து இந்தப் பாதையில் நாம் சென்றால், நாமும் சோவியத் யூனியனைப் போன்றதொரு சமூகத்தை—பரஸ்பர நம்பிக்கையும், சகோதர பாவமும் கொண்ட மக்களைக் கொண்ட நவ இந்தியாவை—நிர்மாணிக்க முடியும் என்பதை சோவியத் யூனியன் நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

ஒவ்வொரு தேசத்திலும், மக்கள் ஆதிக்கத்திற்கு வந்தால், பரிபூர்ண சுய நிர்ணய அஸ்திவாரத்தில், இப்படிப்பட்ட புது சமுதாயத்தை ஏற்படுத்த முடியும் என்பதை சோவியத் யூனியன் நிரூபித்துக் காட்டுகிறது.

## உலக மக்களுக்கு ஆதர்சம்

இந்த சுதந்திர ஜோதி உதயமாவதைப் பார்த்து சுரண்டல் கும்பல்களுக்குக் கிலி பிடிப்பது இயற்கைதானே!

1936-வது ஆண்டு, சோவியத் யூனியனின் புதிய அரசியல் திட்டத்தை வகுத்தபோது, ஸ்டாலின் கூறிய மணி வாக்குகள், இன்றைக்கும், இந்தப் புதிய திருத்தங்களுக்கும் முற்றிலும் பொருத்தமானவை.

"பாஸிஸம் என்ற துர்நாற்றமெடுத்த அலை, இன்று தொழிலாளி வர்க்கத்தின் சோஷியலிஸ்டு இயக்கத்தின் மீது மோதிக்கொண்டிருக்கிறது; நாகரீக உலகத்தின் உன்னத மக்களின் ஜனநாயக அபிலாஷைகளைத் தடுத்து வருகிறது. இந்த சந்தர்ப்பத்தில் நிறைவேற்றப்படும் இந்த அரசியல் திட்டம், பாஸிஸத்தின் மீது நாம் படிக்கும் குற்றப் பத்திரிகையாக விளங்கும். சோஷியலிஸமும், ஜனநாயகமும் என்றைக்கும் தோற்கடிக்கப்பட முடியாதவை என்று இந்த அரசியல் திட்டம் கோஷிக்கிறது. இன்று பாஸிஸ்டுக் காட்டு மிராண்டித்தனத்தை எதிர்த்துப் போராடி வரும் மக்களுக்கு இந்த சட்டம் ஆத்மிக உதவியையும் உண்மையான ஆதரவையும் அளிக்கும்."

# உலக மக்களுக்கோர் வழிகாட்டி!

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

நீடித்து நிற்கக்கூடிய ஒத்துழைப்பிற்கான அஸ்திவாரம் நாட்டப்பட்டிருக்கிறது". இதுதான் இன்றைக்கு ஏற்பட்டுள்ள புதிய நிலைமை. இந்த நிலைமையில், "சோவியத் யூனியனிலுள்ள பல்வேறு குடியரசுகளின் அரசியல், பொருளாதார, நாகரீகக் கலாசார க்ஷேமலாபங்களின் வளர்ச்சிக்கு, பொதுவாக சோவியத் யூனியன் மற்றைய நாடுகளோடு ஒப்பந்தங்களைச் செய்து கொள்வது மாத்திரம் போதாது" என்று கூறுகிறது பிராவ்தா.

உதாரணமாக, போலந்திற்கும், உக்ரேனுக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பை விஸ்தரிக்க இதன் மூலம் வசதி ஏற்படுகிறது. அதேபோன்றுதான், பால்டிக் நாடுகளுக்கும்.

## மக்களிடம் நம்பிக்கை

1913ல் போல்ஷவிக் கட்சி, தேசிய இனங்களுக்கு வகுத்த சுயநிர்ணயக் கொள்கையின் சிகரமே இந்தத் திருத்தங்களாகும். ஏன்? உள்நாட்டு விவகாரங்களில் மாத்திரம் அல்லாது, அயல்நாட்டு ராஜதந்திரத் தொடர்புகளிலும், தேசிய இனங்களுக்கு பரிபூர்ண சுயநிர்ணய உரிமையை அளிக்கிறதல்லவா இந்தத் திருத்தங்கள்? மக்களிடத்தில் நம்பிக்கை வைத்து, தங்கள் வாழ்க்கையை நிர்ணயித்துக் கொள்ளும் உரிமையை அவர்களிடமே விட்டுவிடுவதுதான் இந்தக் கொள்கையின் அஸ்திவாரம்.

இந்த நேரான கொள்கையை திரித்துக்கூற இன்று ஏகாதிபத்திய கோஷ்டிகள் முன்வந்துள்ளன. சோவியத் யூனியன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அநுஷ்டிக்கும்கொள்கையையே பின்பற்றுகிறது என்று சில மேதாவிகள் கூறுகின்றனர். ஆனால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யமோ, ஏகாதிபத்தியச் சுரண்டலை அடிப்படையாகக் கொண்டது. இந்த யுத்த நெருக்கடியின் விளைவாக அதன் முரண்பாடுகள் முற்றி, வெகுவேகமாக முறிந்து கொண்டிருக்கிறது. லார்ட் ஹாலிபாக்ஸ் செய்த பிரசங்கத்தை எதிர்த்து, கானடாவிலும், ஆஸ்திரேலியாவிலும் கூக்குரல்கள் கிளம்புகின்றன. நியூஜிலந்து, சுயஆட்சி கொடுக்கட்டுமா என்று சந்தேகத்தோடு இப்பொழுது கேட்க ஆரம்பிக்கிறது. இந்திய மக்களின் கைக்கு இராணுவ இலாகாவை மாற்ற பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் மறுக்கிறது. பூசல்களும், மனக்கசப்பு பரஸ்பர அவநம்பிக்கை மலிந்து கிடக்கும் இந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை சோவியத் யூனியனோடு ஒப்பிடும் மடமையை என்னவென்று கூறுவது!

சோவியத் யூனியன் இரும்பைப் போன்ற ஒன்றுபட்ட சுதந்திர மக்கள் வாழும் பிரதேசம் என்பதையெல்லாம், இந்தக் கும்பல்கள் மறுத்துவந்தன. ஸ்டாலின் மக்களை, ஏதோ அடக்கி யொடுக்கி வருகிறார் என்றெல்லாம் கயிறுதிரித்தனர்.

## ஸ்டாலின் எச்சரிக்கை

1938ல் நடந்த சோவியத் யூனியனின் கம்யூனிஸ்டுக் கட்சி மகாநாட்டில் ஸ்டாலின் இந்தக்கும்பல்களுக்கு திட்டமாக எச்சரிக்கை செய்திருந்தார்:

"முதலாளித்துவ சமூகம், தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இடையே, விவசாயிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே, தீர்த்து வைக்க முடியாத முரண்பாடுகளால் சிதறுண்டு கிடக்கிறது. இதனால், அது ஸ்திரமற்றிருக்கிறது. ஆனால், சுரண்டல் என்ற சங்கிலிகளைத் தகர்த்தெறிந்த சோவியத் சமூகத்தில் இப்படிப்பட்ட முரண்பாடுகள் கிடையாது. வர்க்கப் போராட்டம் இல்லாத சமூகம் அது. சோவியத் சமூகத்தின் ஆத்மீக, பொருளாதார ஒற்றுமைக்கும், சோவியத் யூனியனிலுள்ள தேசீய இனங்களின் பரஸ்பர சினேகபாவத்திற்கும், சோவியத் தேசபக்திக்கும் இந்தப் பொதுவான முரண்பாடற்ற நல உரிமைகள்தான் மூலகாரணம்.........

## ஹிட்லர் கவனிக்கவில்லை

"இதன் விளைவு என்ன? ஒரு யுத்தம் ஏற்பட்டால், நமது இராணுவத்தின் முன்னணியும், பின்னணியும் அவைகளுக்கிடையேயுள்ள ஒற்றுமையின் காரணமாய், ஒரே தன்மையின் காரணமாய், எந்ததேசத்து இராணுவத்தின் முன்னணி, பின்னணிகளைக் காட்டிலும் பலம்பொருந்தியவையா யிருக்கும். நமது எல்லைகளுக்கப்பால், யுத்தங்களுக்காக, நாக்கில் ஜலம் கொட்டிக்கொண்டிருப்பவர்கள் இந்த விஷயத்தை ஞாபகத்தில்வைத்துக்கொண்டால் அவர்களுக்கே நல்லது" என்று கூறினார்.

இந்த யுத்தம் இந்த வாக்கைப் பரிபூரணமாக நிரூபித்துவிட்டது. இந்த எச்சரிக்கையை கவனிக்காத ஹிட்லர் இன்றைக்குப் படும்பாடுதான் என்ன?

## பிற்போக்காளர் சூழ்ச்சி

சமாதான மகாநாட்டில், மற்ற நேசநாடுகளைக் காட்டிலும் அதிக வோட்டுகளைப் பெறுவதற்காக செய்யப்பட்ட சூழ்ச்சி என்றுகூட சில பத்திரிகைகள் எழுதுகின்றன. உண்மையில், சோவியத் யூனியன் அநுஷ்டிக்கும் கொள்கையை உலகமக்களிடமிருந்து மறைப்பதற்காக, ஏகாதிபத்திய கோஷ்டிகள்தான் இன்று சூழ்ச்சி செய்கின்றன.

சோவியத் யூனியனில், எந்த முதலாளியும் கிடையாது; ஆகவே, பிற நாடுகளைப் பிடித்து, உள்நாட்டு முதலாளிகளின் லாபக் கொள்ளைக்காக, அரசியல் ஆதிக்கம் செலுத்த வேண்டிய அவசியமே சோவியத் யூனியனுக்குக் கிடையாது என்பதைத்தான் இந்தப் பிற்போக்குக் கும்பல்கள் மறைக்கின்றன.

தோன்றிய காலம் முதற்கொண்டே, மக்களின் பலத்திலேயே—சோவியத் மக்களின் பலத்திலும், பிற நாட்டு உழைப்பாளி மக்களின் சகோதர பாவத்திலுமே, அது நம்பிக்கை வைத்திருக்கிறது என்பதை இவர்கள் மறைக்கின்றனர். இந்த சக்திகளின் பலத்தினாலேயே இன்று அது மிகப் பெரிய சக்தியாக விளங்குகிறது; ஸர்வதேசக் கூட்டங்களில் கிடைக்கும் வோட்டுகளின் எண்ணிக்கையினால் அல்ல என்பதை இவர்கள் மறைக்கின்றனர்.

உண்மையில், இந்தத் திருத்தங்களின் விளைவுகளைக் கண்டு, இந்தப் பிற்போக்குக் கும்பல்கள் வெருண்டு போயிருக்கின்றன.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

தேசத் தொழிலாளர் மகாநாட்டுக்கு அனுப்ப வேண்டுமென்று நாம் தொழிற் சங்கங்கள் மூலம் நாடெங்கும் பலத்த கிளர்ச்சி செய்யவேண்டும். அதிகார வர்க்கத்தின் போக்கைக் கண்டிக்க வேண்டும். அதன் சூழ்ச்சியை முறியடிக்கவேண்டும்.

★ கார்ஸிகாவில் ★

# ஜன யுத்தத்தில் ஜனங்கள் விடுதலை

[1943-ம் வருடம் செப்டம்பர் மாதம் 8-ம் தேதியன்று அருணோதயத்தில் பன்னிரண்டாயிரம் தேசபக்தர்கள் ஆயுதம் தாங்கி எழுந்தனர்; பாசிஸ்ட் பாதக்கூட்டத்தைத் தங்கள் புண்ணிய பூமியினின்றும் விரட்டுவதற்காக ஆரவாரித்து ஒவ்வொரு மூலைமுடுக்குகளிலிருந்தும், சந்துபொந்துகளிலிருந்தும், மலை மடுவுகளிலிருந்தும் **"வீவ் லா பிரான்ஸ்!"** (பிரான்ஸ் நீடூழிவாழ்க!) என்ற கோஷமிட்டு எழுந்தனர். பிரெஞ்சு விடுதலைக் கமிட்டியின் சேனை முன்புறம்தாக்க, பின்புறமிருந்து பாசிஸ்டுகளைத் தாக்கினர். துறைந்த சேதம்! பெரிய வெற்றி! நாடு விடுதலையடைந்தது.

கார்ஸிகா தேசபக்தர்கள் அடைந்த வெற்றியையே இந்த தறிப்பிடுகிறோம்.]

கார்ஸிகா என்பது ஒரு தீவு. பிரான்சிற்கு சொந்தம். பிரான்சிற்குத் தெற்கே, இத்தாலிக்கு மேற்கே, ஸ்பெயினுக்குக் கிழக்கே மத்தியத் தரைக்கடலில் இருக்கிறது. ஐரோப்பிய நிலப்பிரபுத்வத்தைக் கலங்கவைத்த நெப்போலியன் போனப்பார்ட் அங்கேதான் பிறந்தான்.

பிரெஞ்சு பூர்ஷ்வா வர்க்கம் பிரான்சை ஹிட்லருக்குக் காட்டிக் கொடுத்தது; பாரிஸ் நகரை ஹிட்லர் விழுங்கினான்; கார்ஸிகாவை அவனுடைய சகபாடி முசொலினி விழுங்கினான். ஆனால் ஜீரணிக்க முடியவில்லை. பிரெஞ்சு மக்கள் சரணடைய மறுத்து, கொரில்லா வீரர்களாய் ஆற்றிவரும் வீர சாஹசங்களை சென்றவாரம் 'ஜனசக்தி'யில் படித்திருப்பீர்கள். கார்ஸிகாவில் இதே "மக்கள் புத்திரர்கள்" ஆற்றிய வீரச் செயல்களையும், இந்தக் கட்டுரையில் தருகிறோம்.

அல்ஜியர்ஸில் பிரசுரிக்கப்படும் பிரெஞ்சு கம்யூனிஸ்ட் பத்திரிகை "லிபர்தே" (சுதந்திரம்)யில் வெளிவந்த செய்திகளிலிருந்து இதைத் தருகிறோம்.

"லிபர்தே" நிருபர் எழுதுகிறார்:

* * *

### பாஸிஸ்ட் எதிரி விட்டோரி

கார்ஸிகாவில் விடுதலைப் போரை நடத்திய முக்கியமான தலைவர்களுள் விட்டோரி ஒருவர். பதினைந்து மாதங்களாக ஜனங்களுடைய வீரனாக வாழ்ந்தார்; ஜெர்மனியர்களுக்கு அவர் பெயரைக் கேட்டாலே கிலி; அவரைப் பிடிக்க கெஸ்டாபோ (ஜெர்மன் இரகசிய போலிஸ்) பட்டபாடு எழுத்துக் கடங்காது. பிரெஞ்சு விடுதலைக் கமிட்டியில் கார்ஸிகா தேச பக்தர்களின் பிரதிநிதியாகவிருக்க, இப்பொழுது அல்ஜியர்ஸிற்கு அவர் வந்திருக்கிறார்.

பாஸிஸ்ட்களை இதற்கு முன்பே அவர் போர்க்களத்தில் எதிர்த்துப் போர்புரிந்திருக்கிறார். ஒருநாள், கைது செய்யப்பட்டு அல்ஜியர்ஸிற்குக் கொண்டு வரப்பட்ட ஒரு பாஸிஸ்ட் அதிகாரியைக் கூர்ந்து நோக்கிவிட்டு, அவனிடம், "நான் உன்னை......... இதற்கு முன்பு பார்த்திருக்கிறேன் ......ஆம். இப்பொழுது புரிகிறது. ஆறு வருடங்களுக்கு முன்பு நாம் இருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து குடாலாஜராவில் (ஸ்பெயின்) சண்டை போட்டிருக்கிறோம்" என்று கூறினார்.

சளையா உள்ளம் படைத்த கம்யூனிஸ்ட் வீரனான, விட்டோரி, சர்வதேச பட்டாளத்தில் (International brigade) தொண்டனாக பாஸிஸ்ட்களை எதிர்த்து ஸ்பெனில் சமர் புரிந்தார். மேலும் அந்த பாஸிஸ்டைப் பார்த்து, "பாஸிஸ்ட் விஷப் பாம்பை பிரனீஸ் மலைகளுக்கு அடுத்த பக்கத்திலேயே (ஸ்பெயினில்) அன்று கொன்று புதைத்திருந்தால், இன்று என்னைப் பெற்ற அன்னையின் வீட்டு வாசற்படியருகில் உங்களை எதிர்க்க வேண்டியிருந்திருக்காது" என்று கூறினார்.

### எதிர்ப்பு ஆரம்பம்

விட்டோரி கூறினார்: "1914-ம் வருஷம் ஜூலை மாதத்தில், நாங்கள் பாஸிஸ்ட்களை எதிர்க்க ஆரம்பித்தோம். எதிர்ப்பு சக்திகளை ஒன்று திரட்ட முற்பட்டோம். முதலில் ஏழே ஏழு பேர்கள்தான் இதை ஆரம்பித்தோம். அந்த ஏழில், போர் புரியும்போதே இருவர் மாண்டனர்; 30 வருடங்கள் கடுந் தண்டனையை ஒருவர் அடைந்தார்; மீதி நின்ற நான்கு பேர்கள், போரைத் தொடர்ந்து நடத்தினோம்."

ஆரம்பத்தில் மிகவும் சிரமமான காரியமாக இருந்தது; அனேகமாக முடியாத காரியம் என்றே சொல்லலாம். பல்வேறுபட்ட அபிப்ராயங்களையும், குடும்பச் சச்சரவுகளையும் ஒழித்து, ஜனங்களிடையே ஒற்றுமையேற்படுத்துவதே முதல் வேலையாகவிருந்தது. ஜனங்களின் ஐக்கியத்தைக் குலைக்க, துரோகிகள் செய்த ஒவ்வொரு முயற்சியையும் முறியடிக்கவேண்டியிருந்தது ஆரம்பத்தில் இதை சாதிப்பது சிரமமாகவேயிருந்தது. சில மாதங்கள் கழிந்தன. கொடிய ஆக்கிரமிப்பாளர்களை ஜனங்கள் வெறுக்க ஆரம்பித்தனர்; சுதந்திர ஆர்வம் அவர்கள் மனதில் கொழுந்துவிட்டெரிந்தது. கீழ்கண்ட இரண்டு கோரிக்கைகளின் கீழ் எல்லோரையும் ஒன்றுபடுத்தினோம். (1) ஆக்கிரமிப்பாளனை நாட்டைவிட்டு விரட்டுவது (2) தன்னுடைய இஷ்டத்திற்கு தனக்குகந்த சர்க்காரை ஏற்படுத்திக்கொள்ள பிரான்சிற்கு சந்தர்ப்பமளிப்பது.

இதன் பின்பு ஒவ்வொரு இளைஞனும், எங்களுடன் சேர்ந்தான். பிரெஞ்சு விடுதலைக் கமிட்டி விமானத்தின் மூலம் 110 டன்கள் ஆயுதங்களை, தீவில் விசியெறிந்தது. 25 டன்களை எதிரிகள் பொறுக்கி எடுத்தனர். மீதி ஆயுதங்கள் பூராவும் எங்கள் வசம் அகப்பட்டன. 12,000 தேசபக்தர்களுக்கும் ஆயுதங்கள் கிடைத்துவிட்டன.

அதன் பின்பு, செப்டம்பர் 8-ம் தேதி வரை (மீட்கப்பட்ட தினம்) பாஸிஸ்ட்களுக்கு விடாத எதிர்ப்புதான்!

பாஸிஸ்ட்களால் விடாமல் தேடப்பட்டு வந்த என்னைப் போன்ற சிலரால் தலைமை வகிக்கப்பட்டு 12,000 தேசபக்தர்களும் நடத்தப்பட்டனர். காடுகளிலும் மலைகளிலும் மிருகங்களைப்போல், மாதக்கணக்கில் நாங்கள் வசித்தோம். எங்களுடைய இரகசிய ரேடியோவும் அச்சுக்கூடமும் இருக்கின்ற ஒரு மலைக் குகையில் நாங்கள் தங்கியிருக்கும்போது, அருகிலுள்ள கிராமவாசிகளிட மிருந்து, "ஒரு துரோகி காட்டிக் கொடுத்துவிட்டான். 1,200 இத்தாலியர்கள் மலையைச் சூழ்ந்து கொண்டனர்;" என்ற செய்தி வந்தது.

உடனே நாங்கள் அந்த இடத்தைவிட்டு ரேடியோவையும் அச்சுக்கூடத்தையும் காப்பாற்ற எவ்வளவு தூரம் விலகிச் செல்ல முடியுமோ, அவ்வளவு தூரம் விலகிச் சென்றோம். திடீரென்று எதிரிகள் எதிர்பாரா வண்ணம் அவர்களைத் தாக்கி, சூழ்ந்து நின்ற அவர்களிடையேப் புகுந்து தப்பிவிட்டோம்.

எல்லா ஜனங்களும் எங்கள் பக்கமே நின்றனர். இராப்பகலாக பல மைல்கள் நடந்து இளைஞர்கள் செய்திகளைக் கொண்டு வருவர்; சைகிளில் வாயு வேகத்தில் போய்க்கொண்டே, வாலிபர்கள் எங்களுடைய துண்டுப் பிரசுரங்களை நகரங்களில் வினியோகிப்பர். எங்களிடம் வீரர்களுக்குமட்டும் குறைச்சலேயில்லை. வயோதிகர் முதல் சிறு பையன்வரை வீரர்களாகத் திகழ்ந்தனர்.

அரிகி என்பவர், போர்டா ஜில்லா காரியங்களை பொறுப்பு வகித்து நடத்தி வந்தார். ஒரு நாள் நீர்மூழ்கியின் மூலம் ஆயுதங்களைக் கரையிலிறக்கிக்கொண்டு இருக்கும்போது, இத்தாலியர்கள் அவரைப் பிடித்துவிட்டனர். அவரைப் படாதபாடு படுத்தினர். பாஸிஸ்ட் சித்திரவதைதான் உங்களுக்கு தெரிந்திருக்குமே. அரிகி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. பதினேழு நாட்கள் கஷ்டப்பட்டு, ஒரு நாள் சுவற்றில் ஒரு பெரிய துவாரம் செய்து அதன்மூலம் தப்பிவிட்டார்.

ஒரு ஜெர்மன் டிப்போவை தாக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கும்போது, ஒரு சின்னப் பையன் வந்து, தானும் போர்புரிய வருவதாகக் கூறினான். ரொம்பவும் சின்னவனாக இருக்கிறானே யென்று நாங்கள் அவனை அழைத்துச்செல்ல மறுத்து விட்டோம். ஆனால் அந்தச் சிறுவன் சும்மா இருக்கவில்லை. எங்களுக்குத்தெரியாமல் மறுபுறமாக வந்து, டிப்போவைத் தாக்கும்போது தானும் பங்கெடுத்துக்கொண்டான். இரண்டு ஜெர்மானியர்களைச் சுட்டுக்கொன்றான். நாங்கள் ஆச்சரியப்பட்டு, 'என்ன ஆயுதத்தை நீ உபயோகப்படுத்துகிறாய்" என்றுகேட்டோம் "82 வயதாகிற என் தாத்தா வைத்திருந்த பறவை சுடுகிற துப்பாக்கியால்தான்' என்று பதில் கூறினான்.

இவர்களைப்போல் எண்ணற்ற வீரர்கள் போராடினார்கள். செப்டம்பர் 8-ம் தேதி எல்லோரும் ஒரே முகமாய் எழுந்தனர். பாஸிஸ்ட்களை விரட்டிவிட்டனர். 25,000 ஜனங்கள் அஜாஸ்யோவில் கூடி வெற்றி விழாக் கொண்டாடினார்கள்.

உணவுக்கு உழவு

### குடியானவர் கும்மிப் பாட்டு

(1) காணிநிலம் பெறுவோம்—மயிலைக்
காளைகளும் பெறுவோம்!
வாணிபர்களிடத்தே—பணமும்
வட்டியின்றிப் பெறுவோம்!!

(2) வானத்தைப் பார்த்திடாது—வகையாய்
வாய்க்கால்களும் குளமும்!
சீனத்துச் சோதரர்போல்—இன்றே
சீரா யமைத்திடுவோம்!!

(3) காலைப் பொழுதினிலே—கலப்பை
கைகளிலேந்திச் செல்வோம்!
மாலைப் பொழுதுவரை—உணவு
மக்களுக்காக் கிடுவோம்!!

(4) கம்பு சோளம்கோதுமை—அரிசி
காக்காய்ச் சோளவகையும்
வம்பர் கொழுத்திடற்கோ—அந்தோ!
வங்கம் வாடலுற்றதோ!!

(5) சிந்துதமிழ் கேரள—வங்க
பந்துஜனம் வாழ்ந்திட
என்றுமிலாத உடை—உணவு
ஏராளமாய்க் குவிப்போம்

(6) சோவியத் வீரச்சமர்—கண்டு
சோர்ந்தது ஆதிபத்யம்
பாவிக் கொடுரர்களின்—பாஸிசம்
பட்டு மடிந்ததுபார்!

(7) நாற்பதுகோடி மக்கள்—நாட்டை
காத்திடற் கொன்றுபட்டு
வேற்றுமை அச்சம்பகை—தவிர்த்து
வீரர்களாய்த் திகழ்வோம்!

(8) பஞ்சப் பேய்கள்தனை—இன்றே
பஞ்சாய்ப் பறக்கடிப்போம்!
கஞ்சிக்கிலை என்றசொல்—இல்லை இல்லை
காலம் மாறிவிட்டதே!!

—தெருப்பாடகன், மதுரை.

சுதந்திர மாளிகையை நோக்கி

# இதாலிய மக்கள்

இத்தாலிய பாசிஸ்ட் தலைவன் முஸோலினி வீழ்ந்தான்; லக்ஷக்கணக்கான மக்களை எமனுலகத்திற்கனுப்பிய பாசிஸ்ட்—நாஜி வண்டியின் அச்சு முறிந்தது. 21 வருடங்களாக அடக்கி ஒடுக்கப்பட்டு கிடந்தஇத்தாலியமக்கள், பழையபடி சுதந்திரம் வந்துவிட்டது என ஆரவாரித்து எழுந்தனர். ஆனால் அவர்களுடைய எழுச்சிக்குக் குறுக்கே நின்றனர், நேசநாட்டுப் பக்கமிருப்பதாக கூறிக்கொள்ளும் பிற்போக்குக் கும்பல்—பாசிஸ்ட் நண்பர்கள். முசோலினியின் பிரதம பாசிஸ்ட் தளபதியாகவிருந்த படோக்ளியோவையும், முஸோலினியைவரவேற்று பாசிஸத்திற்கு வேண்டுவனவெல்லாம் செய்து கொடுத்த இத்தாலிய "மன்னர்" இமானுவலையும், மீட்கப்பட்ட இத்தாலியின் சர்க்காராக ஆக்கினர். நேசநாட்டுத் தளபதி ஐஸன் ஹோவர் தலைமையில் "ஆம்காட்" என்று சொல்லப்படுகிற ஒரு இராணுவ சர்க்காரையும் ஏற்படுத்தினர்.

### பிற்போக்காளர்கள்

இந்த சர்க்கார்கள் செய்த முக்கியமான காரியங்கள் என்ன தெரியுமா! எல்லா பாசிஸ்ட்களையும் பிடித்து சிறையில் அடைப்பதற்கு பதிலாக, பொதுஜனப் பிரதிநிதித்துவம் பெற்ற, கம்யூனிஸ்ட், சோஷியலிஸ்ட், லிபரல் ஆகிய எல்லா கக்ஷிகளும் சேர்ந்த தேசீய விடுதலைக் கமிட்டி கூட்டிய மஹாநாட்டை, நடத்தக்கூடாது என்று உத்தரவு போட்டார்கள்.

இந்த தடையுத்தரவை எல்லாக் கக்ஷிகளும் சேர்ந்து கண்டித்து கிளர்ச்சி செய்தன.

இது சென்ற வருடம் டிசம்பர் மாதம் நடந்தது. இந்த செய்திக்குப் பிறகு இவ்வளவுநாட்களாக அதைப் பற்றி ஒரு செய்தியும் நம் நாட்டிற்கு எட்டவில்லை. இப்பொழுதுதான் ஒரு செய்தி வந்திருக்கிறது.

### சூழ்ச்சி முறிந்தது

மாஸ்கோவில் நடந்த நேசநாட்டுப் பிரதிநிதிகளுடைய மஹாநாட்டின் முடிவின்படி, "இத்தாலியன் அட்வைசரி கவுன்சில்" என்ற பெயருடன், நேசநாடுகளால் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. அதில் சோவியத் பிரதிநிதியும் இருக்கிறார். "இத்தாலியைப்பற்றி மாஸ்கோ மஹாநாட்டில் வெளியிட்ட பிரகடனத்தை இராணுவ அதிகாரிகள் நிறைவேற்ற வேண்டும். குறிப்பாக ஜனநாயக உரிமைகளைத் தடுக்கக் கூடாது" என்று இந்தக் கவுன்சில் உத்தரவிட்டது. இதாலியில் உள்ள கக்ஷிகளும், இதற்கு ஆதரவாக ஐக்கிய முன்னணி ஏற்படுத்தி நின்றன; பிற்போக்குக் கும்பல்களின் சூழ்ச்சி முறியடிக்கப்பட்டது.

### சர்வகட்சி மகாநாடு

இதன் பின்பு தென் இத்தாலியில் உள்ள பாரி (Bari) என்ற நகரில் இத்தாலிய தேசீய விடுதலைக் கமிட்டியின் சர்வ கக்ஷி மஹாநாடு ஜனவரி மாதம் 28-ம் தேதி யன்று நடைப்பெற்றது. லிபரெல், சோஷியலிஸ்ட், கம்யூனிஸ்ட் முதலிய 5 அரசியல் கட்சிகளின் சார்பாக 120 பிரதிநிதிகள் வந்திருந்தனர். சார்டினியா, சிசிலி, ஆகிய இடங்களிலிருந்தும், ஜெர்மன் ஆக்கிரமிப்பின் கீழ் இருக்கும் வட இத்தாலியில் இரகசிய எதிர்ப்பை நடத்தும் கட்சிகளின் சார்பாக ரோமிலிருந்து மூன்று பிரதிநிதிகளும் மஹாநாட்டில் கலந்துகொண்டனர். இத்தாலிய மக்கள் சரித்திரத்தில் இந்த மஹாநாடு புதிய அத்தியாயத்தைத் திறந்து வைத்தது.

(7-ம் பக்கம் பார்க்க)

ஸ்பெயினில்

# பிராங்கோவின் நடுநிலைமை பாசாங்கு

ஸ்பெயினில் பாசிஸ்டு ஆட்சி நடத்தும் ஜெனரல் பிராங்கோ, நடுநிலைமை போர்வை போர்த்துக்கொண்டு, ஹிட்லருக்கு உதவி செய்துகொண்டு வருவதைப்பற்றி ஏற்கனவே எழுதியுள்ளோம். இதைப்பற்றி சோவியத் யூனியன்தான் முதன் முதலில் வெளிவந்து பிராங்கோவின் பித்தலாட்டத்தை வெளிப்படுத்தி அறிக்கை விட்டது.

இப்பொழுது அமெரிக்க சர்க்காரும் இதை உணர்ந்திருக்கின்றது. ஜனவரி 28-ந் தேதியன்று அமெரிக்க சர்க்கார் வெளியிட்ட ஒரு அறிக்கையைப் பாருங்கள்:

"ஸ்பெயின் சர்க்காரின் கொள்கையில் காணப்படும் சில போக்குகளினால், அதற்கு இதுவரை அனுப்பி வந்த பெட்ரோல் இப்பொழுது நிறுத்தப்படுகிறது.

"அமெரிக்க சர்க்காரின் சில கேள்விகளுக்கு ஸ்பானிஷ் சர்க்கார் சரியாகவே பதிலளிக்கவில்லை. மேலும்

சில இதாலிய யுத்தக் கப்பல்களையும், வியாபாரக் கப்பல்களையும் நேசநாடுகளிடம் ஒப்படைக்காமல், பிராங்கோ தன்னுடைய துறைமுகங்களில் இன்னும் அடைத்து வைத்திருக்கிறார். அதுமட்டுமா? டங்ஸ்டன் போன்ற, யுத்தத்திற்கு அதி அவசியமான உலோகங்களை இன்னும் ஸ்பெயின் ஜெர்மனிக்கு அனுப்பிக்கொண்டிருக்கிறது. இன்னுமென்ன!

ஸ்பெயினிலும், பிராங்கோவின் ஆட்சிக்கு அடிமையாயிருக்கும் சில பிரதேசங்களிலும், டான்ஜியர்ஸ் நகரத்திலும் அச்சு நாடுகளின் ஏஜெண்டுகள் ரகசியமாக சதி வேலைகள் பல செய்துகொண்டிருக்கின்றனர். இதை பிராங்கோ (வேண்டுமென்றே) அனுமதித்துக் கொண்டிருக்கிறார். இத்துடன் நிற்கவில்லை,

ஸ்பானிய "புளு டிவிஷன்" என்று சொல்லப்பட்ட பட்டாளம் ரஷ்யர்களை எதிர்த்து, ஹிட்லருக்கு ஒத்தாசையாக இன்னும் சண்டையில் ஈடுபட்டிருக்கிறது.

வெகு சமீபத்தில் ஜெர்மனிக்கும் ஸ்பெயினுக்கும் ஒரு ஒப்பந்தம் வேறே ஏற்படப் போகிறதென்றும் அதன்படி ஜெர்மனிக்கு ஸ்பெயின் பலலட்சம் பவுன்கள் கடன் கொடுக்கப்போகிறதென்றும் தெரிகிறது. இது எதற்காகவெனில், ஸ்பெயினில் நேசநாடுகளுக்கு விரோதமாக சதி வேலைகள் செய்யும் ஜெர்மன் ஏஜெண்டுகளின் சம்ரக்ஷணைக்காக.

—USOWI.

குறிப்பு:—பிராங்கோவின் பாசிஸ்டு ஆட்சியை எதிர்த்து ஸ்பெயின் தேச பக்தர்களின் தேசீய விடுதலைக் கமிட்டி ஒன்று ஏற்பட்டிருப்பதாகச் செய்தி வந்துள்ளது—ஆர்.

(முதல் பக்கத் தொடர்ச்சி)

மேற்சொன்ன சம்பவத்திலிருந்து கொரில்லாக்களுடன் சமரஸம் பேச முற்படுவது என்பதையே ஜப்பானியர்கள் கைவிட்டுவிட்டனராம்,

மார்க்கஸ்செக் இன்னும் சில ருசிகரமான விஷயங்களை நமக்குத் தெரிவிக்கிறார்:—"மலேயா முழுவதிலும், காடுகளிலும், மலைகளிலும் கொரில்லாக்கள் வாசம் செய்கின்றனர். அங்கு எவ்வளவு ஜப்பானியத் துருப்புகள் வைக்கப்பட்டிருக்கின்றனவோ அதைக் காட்டிலும் ஆறு மடங்கு எண்ணிக்கை அதிகமாக உள்ளனர்.

அந்த கொரில்லாப் படைகளில் பிரிட்டிஷ் சோல்ஜர்கள், ஆஸ்ட்ரேலியர்கள், சீனர்கள், இந்தியர்கள் மலேயா வாசிகள் முதலிய பல தேசீய சமூகங்களைச் சேர்ந்தவர்களும் இருக்கின்றனர். இவர்களில் சீனர்கள்தான் பெரும் பாகம்.

—China information Bulletin Calcutta.

Edited, Printed and Published by P.RAMAMURTHI at the "Janasakthi" Press 1/6 Davidson Street, Madras.